குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 30 ] சாதாரண ஆண்டு தைத்திங்கள் 10-2-71 [ இதழ் 3



திருவையாறு ஸ்ரீ ஆட்கொண்டார்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஆர்பெரியர் ஆர்சிறியர்
  ஆர்உறவர் ஆர்பகைஞர்
சீர்பெரியர் ஆனந்த
  சிற்சொரூபர் — பேர்பெரியர்
எங்கெங்குந் தாமாய்
  இருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்றுவதா
  னல். (96)

---

ஆசிரியர் :
வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

---

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 30 | 10-2-71 | இதழ் 3

## உட்பொருள்



உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

தருமை ஆதீனத்திலிருந்து மாதந்தோறும் வெளிவரும் "ஞானசம்பந்தம்" இதுவரை, தமிழுலகிலும் தமிழர்வாழும் கடல்கடந்த நாடுகளிலும் சமயத்துறையில் ஒரு விழிப்புணர்ச்சியை உருவாக்கியது என்பதை அனைவரும் அறிவர்.

ஸ்ரீலஸ்ரீகயிலைக்குருமணி அவர்களின் அருளுரை, புத்தம்புதிய சமய, இலக்கிய, இலக்கணக் கட்டுரைகள், செய்திகள், எதிர்காலம் முதலியவற்றுடன் படிப்பவர் பயனுறும் வகையில் வெளிவரும் ஞானசம்பந்தம் இதழைத் தொடர்ந்து அன்பர்கள் வாங்கி ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

30—11—70 ஆம் தேதியுடன் ஞானசம்பந்தம் இதழின் ஆண்டு முடிவுற்றும் சென்ற ஆண்டு சந்தா பாக்கி இதுவரை செலுத்தாதவர்கள் உடன் சந்தாவைச் செலுத்தியும் பழைய சந்தாதாரர்கள் மீண்டும் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும் புதிய சந்தாதாரர்களாகச் சேரவிரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக்கட்டணம் அனுப்பியும் "ஞானசம்பந்தம்" இதழைப் பெற்றும் கற்றும் பயனுறுவார்களாக.

ஆண்டுச் சந்தா

உள்நாடு ரூ. 3—00 வெளிநாடு ரூ. 4—00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

செயலாளர்
ஞானசம்பந்தம் காரியாலயம்,
தருமையாதீனம்
தருமபுரம், மாயூரம் P. O.

திருவையாறு:



இராசகோபுரம்

உ.
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 30 || சாதாரண - தை - 10—2—71 || இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே, — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## சிவ மாநகர்

நல்ல பண்பாடுடைய மக்களை, 'நாகரிகம் உடைய மக்கள்' என்பர். 'நாகரிகம்' என்பது 'கண்ணோட்டம்' (தாட்சணியம்) என்ற பொருளில் பண்டைய நூல்களில் வருதலைக் காண்கின்றோம். இதினின்றும், 'பண்பாடுகளில் தலையாயது கண்ணோட்டம்' என்று பண்டை மக்கள் கருதினமை புலனாகும். எவ்வாறாயினும், 'நாகரிகம்' என்பது சிறந்த பண்பையே குறிப்பதாகின்றது.

'நாகரிகம்' என்பது நகர சம்பந்தம் பற்றி வந்தது எனக் கருதுவர். இன்றும், நாட்டுப் புறங்களில் வாழும் மக்களைவிட, நகரங்களில் வாழும் மக்கள் நாகரிகம் மிக்க

மக்களாகக் கருதப்படுதல் தெளிவு. நகர வாழ்க்கை, நாகரிகம் உடையதாகவும், இனியதாகவும் இருத்தற்குக் காரணம், அங்குள்ள வாழ்க்கைச் சூழலின் நல்லமைப்பே. இதனால், பலர் நாட்டு வாழ்க்கையை விடுத்து, நகர வாழ்க்கையை அடைய விரும்புதலைக் காண்கின்றோம். நகர வாழ்க்கையிலும் மாநகர் வாழ்க்கையை விரும்புபவரும், மாநகர் வாழ்க்கையிலும் பெருமாநகர் வாழ்க்கையை விரும்புபவரும் உளராதல் வெளிப்படை. மதுரை மாநகரில் பாண்டிய மன்னனுக்கு அமைச்சுரிமை பூண்டு நாகரிகத்தில் திளைத்திருந்த மாணிக்கவாசகர் ஒரு பெருமாநகர் வாழ்க்கையை விரும்பியதை அவரது திருப்பாடலால் அறிகின்றோம். அந்தப் பெருமாநகரை அவர் 'சிவ மாநகர்' என்று குறிப்பிடுகின்றார்.

மானேர் நோக்கி உடையாள் பங்கா
மறையீ றறியா மறையோனே!
தேனே! அமுதே! சிந்தைக் கரியாய்!
சிறியேன் பிழைபொறுக்கும்
கோனே! சிறிதே கொடுமை பறைந்தேன்
சிவமா நகர் குறுகப்
போனார் அடியார்; யானும் பொய்யும்
புறமே போந்தோமே.

'சிவம்' என்பதற்கு 'நன்மை' (மங்கலம்) என்பதே பொருள். அதனால், 'சிவ மாநகர்' எனவே, 'நல்ல மாநகர்' என்பது பொருளாயிற்று. 'நல்ல நகர்' என்றால் எத்தகையது? 'நாடு' என்று ஓர் அதிகாரத்தை வைத்த திருவள்ளுவர். 'நகர்' என்று ஒரு தனி அதிகாரம் வைக்கவில்லை. நகரத்தை நாட்டிலேயே அடக்கிவிட்டார்.

"பிணியின்மை, செல்வம்,விளை(வு), இன்பம்,ஏமம்
அணிஎன்ப நாட்டிற்கிவ் வைந்து"

என்று அவர் நாட்டிற்குக் கூறிய யாவும் நகரங்கட்கும் பொருந்துவன அல்லவோ! இன்னும் அவர் 'அரண்' என்பதில் கூறியவற்றுள் பல, நகர அமைப்பிற்குப் பொருந்துவனவாம்.

" சிறுகாப்பின் பேரிடத்த தாகி, உறுபகை
ஊக்கம் அழிப்ப தரண் "

" கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீர தரண் "

" எல்லாப் பொருளும் உடைத்தாய், இடத்துதவும்
நல்லாள் உடைய தரண் "

என்பவை காணத்தக்கன.

'பாரி வள்ளலது பறம்பு மலையை மூவேந்தர் முற்றுகை யிட்டு முற்றுகை பல நாள் நீடித்திருந்தபொழுதும், அதனுள் வாழ்ந்த மக்கள் இன்னலின்றி இனிதிருந்தார்கள்' என்று சொல்லப்படுவதும், 'அதற்குக் காரணம் அம்மலையின் இயற்கை வளப்பம்' என்று அதனை, 'கபிலர்' என்னும் நல்லிசைப் புலவர் எடுத்துக் காட்டியிருப்பதும் பாரி வள்ளலது தலைநகரின் சிறப்பை விளக்குவனவேயாம். ஆகவே, 'இத்தகைய சிறப்புக்களை உடையதே நல்ல மாநகர்' என்னலாம்.

இன்னும் ஔவையார்,

" நாடா கொன்றோ காடா கொன்றோ,
அவலா கொன்றோ, மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே " —புறம். 187

என்று கூறியவாற்றால், 'யாதொரு நகரமும் எல்லா வளப்பங் களையும் உடையதாயினும், அங்கு நல்லோர் இல்லையேல், அது நல்ல நகரம் ஆகாது' என்பதும், 'பிற வளங்கள் இல்லாதிருப்பினும், நல்லோர் இருப்பாராயின், அது நல்ல நகரமாம்' என்பதும் விளங்கும்.

திருவள்ளுவரும்,

" தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு "

என்று, ஒரு நாடு நல்ல நாடாதற்கு, அங்குத் தக்கார் வாழ்தல் வேண்டும்' என்ருர். 'பிசிராந்தையார்' என்னும் சங்கப் புலவர்,

" ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்ரேர் பலர்யான் வாழும் ஊரே "

என்று, சான்ரேர் வாழ்வதால் தமது ஊர் சிறப்புடையதாதலைத் தெரிவித்தார். இவ்வாற்ருல், 'நல்லோர் வாழும் மாநகரே நல்ல மாநகர்' என்றும், 'சிவமாநகர்' என்பதற்கு 'நல்ல மாநகர்' என்பதே பொருள்' என்றும் கூறுவோமாயின், 'நல்லோர் வாழும் நகரமே சிவமாநகராகும்' என்பது, சொல்லாமலே அமைகின்றது.

இனி, 'நல்லோராவார் யாவர்' என்று நோக்குமிடத்து, 'சிவபெருமானை மறவாத சிந்தையராய்ச் செம்மையுள் நிற்கும் சீரியரே நல்லோர்' என்பது அறியப்படும். எவ்வாறெனில், 'சிவம்' என்பதற்கு 'நன்மை' என்பதே பொருள் என்று மேலே கூறினேம்.

" குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல் "

என்றும்,

" அரியகற் ருசற்ருர் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு "

என்றும் கூறியவாறு, மக்கள் என்போர் யாவரிடத்தும் நன்மை சிறிதாகவோ, பெரிதாகவோ அமைந்திருப்பினும், தீமையே இல்லாதொழிய, நன்மையே நிறைந்தவர் எவரும் இலர். ஆயினும், தீமையோடு தொடர்பு இன்றி, நன்மையே வடிவானவன் ஒருவன் உளன்; அவன்தான் சிவன் - நல்லான். இவனை,

" நல்லானை, நல்லான நான்மறையோ டாறங்கம்
வல்லானை வல்லார்கள் மனத்துறையும் மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகள்ஏதும்
இல்லானை எம்மானை என்மனத்தே வைத்தேனே "

என்று புகழ்கின்ருர் சொல்வேந்தர். குறைவில்லாத நிறைவை யுடைமை பற்றிச் சிவபெருமானைச் சுந்தரரும், மாணிக்கவாசகரும் "குறைவிலா நிறைவே" என அழைக்கின்றனர்.

"குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அனுதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவன்என அறிவின் மேலவர்"

என்கின்ருர் சிவஞான முனிவரர். எனவே, 'நல்லவன்' என்னும் பெயர்க்கு முற்ற உரியவன் சிவபெருமானே என்பது விளங்கும். இந் நல்லவனைச் சேர்ந்தோர்தாமும் நல்லவராவர். "கனக மலையருகே - போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே" (பொன்வண்ணத்தந்தாதி - 100) என்றபடி, பொன்மலையைச் சார்ந்த காக்கையும் பொன் வண்ணமாவதுபோலச் சிவபெருமானைச் சார்ந்தவரும் சிவமே யாவர். இது பற்றியே சிவபெருமானை, "திகழ்ந்த மெய்ப் பரம்பொருள் சேர்வார் தாமே தானுகச் செயுமவன்" என்று திருஞானசம்பந்தர் அருளிச்செய்தார். (திருமுறை 1-126,7.) இதனுல், சிவபெருமானும், அவனைச் சார்ந்து சிவமேயான சிறப்பினரும் விளங்கி நிற்கும் நகரமே, சிவமாநகர்' எனப் பட்டது. அதனது ஒப்பு உயர்வு இல்லாத பெருமையை உணர்ந்த மாணிக்கவாசகர், தம்மோடு உடன் இருந்த அடியார்கள் அந்தச் சிவமாநகரை அடையும்பேறு பெறத் நமக்கு அது வாய்த்திலாமையை எண்ணி எண்ணிப் பல்காலும் இரங்குவாராயினுர்.

"அவமே பிறந்த அருவினையேன் உனக்கு அன்பருள்ளாம்
சிவமே பெறுந்திரு எய்திற் றிலேன்"

என்ருர் ஓரிடத்தில். இதனுல் 'மாநகர் வாழ்க்கையை விரும்பும் நாகரிகம் உடையார் பலருள்ளும் மாணிக்கவாசகர் எந்த மாநகர் வாழ்க்கையை விரும்பிய எத்தகைய நாகரிகம் உடையவர்' என்பது இனிது விளங்கும்.

மாணிக்கவாசகர் விரும்பிய சிவமாநகர் பலர்க்கு எளிதில் கிடைப்பது அன்ருயினும், அதனேடு ஒருங்கு ஒத்தனவாய், நம்மனேர் பலர்க்கும் எளிதில் அடையத்தக்கனவாய் அப் பெருமான் தனது திருவருட்பெருக்கால் அமைத்துள்ள

சிவமாநகர்கள் பல உள. அவைகளே சிவ தலங்கள்; மாணிக்க வாசகர் போன்ருரது பண்பாட்டிலே (நாகரிகத்திலே) நிற்பவர்கள் அந்த மாநகரங்களில் வாழும் வாழ்க்கையையே பெரிதும் விரும்புவார்கள் அந்த நகரங்கள் 'பூலோக சிவலோகம்' என்னும் காரணத்தால் அவைகளின் பெருமையைத் தல புராணங்கள் சிறந்தெடுத்துக் கூறும்.

உண்மையில் பூலோக சிவலோகமாக விளங்குவது திருக் கயிலாயம். ஆயினும் அதற்கு அங்கமாக அமைந்த சிவ தலங்கள் பலவும் பூலோக சிவலோகங்களேயாம். அதனுல், 'அவைகளில் பிறந்தால் முத்திதரும்' எனவும், 'வாழ்ந்தால் முத்தி தரும்' எனவும், 'அவைகளைச் சென்று கண்டால் முத்தி தரும்' எனவும், 'நினைத்தால் முத்தி தரும்' எனவும். 'அவற்றது பெயரைக் கேட்டால் முத்திதரும்' எனவும், 'இறுதியில் அங்குத்தங்கி இறந்தால் முத்தி தரும்' எனவும் இவ்வாறு புராணங்கள் பலவாறு சிறப்பித்து ஓதும். உண்மையில் இச் சிவமா நகரங்களில் பிறத்தல் முதலிய பலவும் புண்ணியம் உடையார்க்கே வாய்ப்பனவாம்.

"மூர்த்தி தலம்தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்ற தாயுமானவர் வாக்கில் உள்ள மூர்த்தி முதலிய மூன்றில் நடுவே உள்ள 'தலம்' என்பதே ஏனைய இரண்டிற்கும் இடமாதல் கருதத்தக்கது.

"தென்னுடுடைய சிவன் என்பதற்கு ஏற்ப இத்தகைய சிவமாநகர்களை, வானளாவிய மதில், கோபுரம், தூபி முதலியவைகளுடன் பெற்று விளங்குவதே தமிழகத்தின் தனிச் சிறப்பு. 'நகர்' என்பதற்கே, 'கோயில்' என்ற பொருள் தான் முற்காலத்தில் கொள்ளப்பட்டது. தமிழ்மக்களின் தனி நாகரிகச் சிறப்பும் இச் சிவமாநகரங்களாலேயே பலர்க்கும் விளங்குதல் இன்றும் காணப்படுவது. இந் நகரங்களில் விழாக்கள் பலவும் சிறந்து விளங்குதல் பெரும்பான்மையும் உத்தராயணகாலத்திலேயாகும். 'தை பிறந்தால் வழிபிறக்கும்' என்பது இதற்கு - இவ்வுய்யும் வழிக்கு மிகமிகப் பொருந்துவதாகும், ஆகவே, தை பிறந்த பின்பாயினும், சிவதலங்களின் சிறப்பை நினைந்து பயன்பெறுவோமாக.

௨

குருபாதம்

குருவருள்

# தோத்திரமும் சாத்திரமும்

## ஒரு திரு அடி

மக்களது தன்மை அவர்களது செயலில் மட்டுமன்றிச் சொல்லிலும் நன்கு புலப்படுவதாகும். 'ஓதும் உரையால் அறிவின் அளவு உணரப்படும்' என்கின்றது சிவஞானசித்தி. "அரும்பயன் ஆயும் அறிவினர் கூறார் பெரும்பயன் இல்லாத சொல்" என்பதனால், 'அறிவுடையோர்கள் பயனில்லாத சொற்களைச் சொல்லாமையே யன்றிச் சிறுபயனுடைய சொற்களையும் சொல்லமாட்டார்' என்கின்றார் திருவள்ளுவர். இன்னும் அவர், "பல சொல்லக்காமுறுவர் மன்ற மாசற்ற - சிலசொல்லல் தேற்றாதவர்" என்று, 'அழுத்தந் திருத்தமான சில சொற்களைச் சொல்லமாட்டாதவரே, வலிமையில்லாத பல சொற்களைக் கொட்டிக் குவிப்பார்கள்' எனக் கூறுகின்றார்.

இம்முறையில் அருளாளர்கள் வாக்கினின்று வரும் ஒன்றிரண்டு சொற்களே உலகிற்குப் பெரும்பயன் தருவதாதல் வெளிப்படை. திருஞானசம்பந்தரது திருவாக்கில், "வேந்தனும் ஓங்குக" என்று எழுந்த ஒருதொடர், பாண்டிய மன்னனைப் பின்பு நெல்வேலிப் போரை வென்று வாகை சூடி வேந்தர் வேந்தனுய்ச் சிறந்துவாழச் செய்ததேயன்றி, அவனது உடம்பில் பிறவியிலே அமைந்திருந்த கூனையும் அப்பொழுதே நீக்கி நெடுமாறனாகச் செய்தது.

முன்னைத் தவப்பயனாக ஒரு சிலர்க்குக் கிடைக்கப்பெறுகின்ற ஞானாசிரியர் தம் மாணாக்கரை ஒரு சொல்லாலே ஞானிகளாகச் செய்வர் என்கின்றனர். மாணிக்கவாசகரும் இறைவன் தம்மைக் குருவாக வந்து ஆட்கொண்டபொழுது ஒரு வார்த்தையினாலே தம்மை அவன் வசப்படுத்திக்கொண்டதாகக் கூறுகின்றார். ("மன்ன என்னை ஓர் வார்த்தையுட்படுத்துப்

பற்றிஞய்" திருவாசகம் - செத்திலாப் பத்து - 2.) நமது ஆதீன 8 ஆவது மகாசந்நிதானம் அவர்கள்மீது சொர்க்கபுரம் ஸ்ரீலஸ்ரீ அழகியதிருச்சிற்றம்பல தேசிக சுவாமிகள் அருளிச் செய்த கிளிவிடுதூதிலும் தம் ஆசாரியரை, "என் உயிருக்குச் சொன்ஞன் ஒருசொல்" என்று அருளியுள்ளார்கள். இவ்வாறு அருளாளர்கள் வாக்கில் எழுகின்ற ஒரு சொல்லே உலகத்தை உய்விக்கக் கூடியதாய் இருக்கின்றது என்ருல், அவர்கள் திருவாய் மலர்ந்தருளும் பல சொற்களும் எத்துணைப் பயன் விளைப்பனவாகும்.

நம் சமயாசாரியர் நால்வரும் உலகை உய்விக்க வந்த பெருமக்கள். அதனுல் அவர்கள் தாங்கள் இருந்த இடத்திலே இருந்துவிடாமல் நாடு முழுவதும் யாத்திரை செய்து நன்னெறியினை ஆங்காங்கு உள்ள மக்களும் பின்பற்றுமாறு தங்கள் அருட்டிருப்பாடல்களை அருளிச்செய்தனர். அவர்கள் இதன் பொருட்டு மேற்கொண்டது தல யாத்திரை. பெருவழியில் பெரிய நகரங்களில் காணப்படும் பெரிய கோயில்களுக்குமட்டுமன்று; தமிழ் நாட்டில் எந்த மூலை முடுக்கில் எந்தச் சிறுகோயில் இருப்பினும் அங்குச் சென்று வணங்க அவர்கள் தவறியதில்லை. அதனுல் சிறப்பாக மூவர் முதலிகள் வாயிலாக ஆயிரம் ஆயிரமாகத் தேவாரத் திருப்பதிகங்கள் செந்தமிழ்மொழியில் தோன்றின. அவைகளில் இன்று நமக்குக் கிடைப்பன சிலவே. அத்திருப்பதிகம் பெற்ற தலங்கள் இன்று. 'பாடல்பெற்ற தலங்கள்' என்னும் சிறப்பைப் பெற்றுத் திகழ்கின்றன. திருப்பதிகம் கிடைக்கப்பெருவிடினும், வேறு திருப்பதிகங்களில் எடுத்தோதியருளப்பெற்ற தலங்கள் 'வைப்புத் தலங்கள்' என்னும் பெயரொடு விளங்குகின்றன.

இத்தகைய திருப்பதிகங்கள் ஆங்காங்கு வாழும் மக்களுக்குச் சிறந்த திருநெறித் திருப்பாடல்களாய் விளங்கி உய்விக்கின்றன. எனவே அவைகளில் அமைந்த ஒவ்வொரு சொல்லும் திருவருள் திருமொழிகளாய் இலங்குதல் தெளிவு. திருவாதவூரடிகளது திருப்பாடல்களில் அமைந்த ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மாணிக்கம்போல் இருத்தல் பற்றியே அவருக்கு 'மாணிக்க வாசகர்' என்ற திருப்பெயர் இறைவனுலே சூட்டப்பட்டது எனத் திருவிளையாடற் புராணம் கூறு

கின்றது. சமயாசாரியர்களது வாக்கில் எழுகின்ற ஒவ்வொரு சொல்லும் 'திருமொழி' எனப்படுதலால், அவற்ருலாகிய பாடல்கள், 'திருப்பாடல்கள்' என்றும், அப்பாடல்களின் தொகுதி, 'திருப்பதிகம்' என்றும் சொல்லப்படுகின்றன. ஆகவே, அப்பாடல்களில் அமைந்த ஒவ்வோர் அடியும் திரு அடியே ஆகின்றதன்ரே. அத்திருஅடிகளில் ஒருதிருஅடி இங்குச் சிந்தனைக்கு உரியதாகின்றது. அது, ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டு, அப்பொழுதே இறைவனை அடையாளங் களுடன் காட்டியருளிய முதல் திருப்பதிகத்தின் இரண்டாவது திருப்பாடலில் முதலில் அமைந்துள்ள திருஅடியே. அது,

“ முற்றல் ஆமைஇள நாகமொ டேன
முளைக்கொம் பவைபூண்டு ”

என்பது.

'சிவபெருமான் தன்மேல் அணிந்துள்ள அணிகலங்கள் ஆமை ஓடு, பாம்பு, பன்றிக் கொம்பு' என்பதே இதன் பொருள். 'இவற்றைச் சிவபெருமான் அணிந்தது ஏன்' என்னும் வினவிற்குப் புராணங்கள் பின்வருமாறு விடை கூறுகின்றன.

'தேவர்கள் திருப்பாற்கடலை மந்தர மலையை மத்தாக இட்டு. வாசுகியைக் கயிருகச் சுற்றிக் கடைய முயன்றபொழுது மந்தர மலை மிதக்காமல் அமிழ, அதனைத் திருமால் ஆமை (கூர்ம) வடிவங்கொண்டு முதுகில் தாங்கினர். அதனுல் மிதந்த மந்தரத்தைச் சுழற்றிக் கடைந்து அமுதம்பெற்றனர். ஆகவே, 'தேவர்கள் அமுதம் கிடைக்கப்பெற்றது தன்னுலே யன்ரே' என்று செருக்குக்கொண்ட ஆமை மற்றைக் கடலைக் கலக்கியும், உலகைச் சிதைத்தும் துன்பம் செய்யச் சிவ பெருமான் தேவர்களது வேண்டுகோளுக்கு இரங்கி, அவ் ஆமையை அழித்து, அதன் ஓட்டினைத் தம்மார்பில் மதாணியாக அணிந்துகொண்டார்'

'காசிப முனிவர்தம் மனைவியர் பதின்மூவருள் 'கத் துருவை' என்பவள் பல பாம்புகளைப் பெற்ருள். மற்ருெரு மனைவி 'வினதை' என்பவள் ஒரு பணயத்தில் தோற்றமை காரணமாக மேற்கூறிய கத்துருவைக்கு அடிமையானுள்.

அதன்பின்பு வினதை கருடனைப் பெற்ருள். கருடன் தன் தாயோடு கத்துருவைக்கும் அவள் பெற்ற பாம்புகளுக்கும் அடிமைத் தொழில் செய்து வருந்தினுன். அக்காலத்தில் பாம்புகளால் கருடன் அடைந்த துன்பங்கள் பல. பின்பு கருடன் இந்திரனிடத்தில் இருந்த அமுதக் குடத்தைத் தனது வலிமையால் கொணர்ந்து கொடுத்துத் தானும், தன் தாயும் அடிமையிலிருந்து நீங்கும் நிலைமையைப்பெற்ருன். அதன் பிறகு கருடன் பாம்புகளிடத்தில் தீராப்பகைகொண்டு அவை களைத் துன்புறுத்தத் தொடங்கினுன். அதனுல் அஞ்சிய பாம்புகள் சிவபெருமானை வழிபட, அவைகளின்மேல் இரக்கங் கொண்டு அவைகளை எடுத்துத் தன்மேல் அணிகலங்களாக அணிந்துகொண்டான்'

'ஒரு பிரளய வெள்ளத்தில் அமிழ்ந்துபோன பூமியைத் திருமால் வராக அவதாரம் கொண்டு தனது இரு கொம்பு களின்மேல் (தந்தத்தின்மேல்) அந்தப் பூமியை எடுத்துத் தாங்கிக் காத்து, அதனுல் செருக்குற்று நிற்கச் சிவபெருமான் அவ்வராகத்தை அழித்து அதன் கொம்புகளை மார்பில் அணிந்துகொண்டார்.

ஞானசம்பந்தர், செருக்குக்கொண்ட ஆமையை, "முற்றல் ஆமை" என்றும், அஞ்சிய பாம்புகளை "இள நாகம்" என்றும் அருளிச்செய்த நயம் அறிந்து இன்புறத்தக்கது. தாருகாவன முனிவர் தம் வேள்வியில் உண்டாக்கி விடுத்த பாம்புகளையும் சிவபெருமான் அணிகலமாக அணிந்த வரலாறு உண்டு. ஆமை ஓட்டினை அணிந்த வரலாறும், ஏனக் கொம்பினை அணிந்த வரலாறும் 'செருக்கினை நீக்குபவன் சிவபெருமான்' என்பதையும், பாம்பினை அணிந்த வரலாறு, 'எளியவர்க்கு இரங்குபவன் சிவபெருமான்' என்பதையும் விளக்குவனவாம்.

உயிர்கள் அடையும் துன்பத்திற்கெல்லாம் முதற்காரணம், 'யான்' என்னும் செருக்கேயாகும்.

> "செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
> பெருக்கம் பெருமித நீர்த்து"

என்று, நீக்கப்படவேண்டிய குற்றங்களில் முதற்குற்றமாகத் திருவள்ளுவர் செருக்கினையே எடுத்துக் கூறியுள்ளார்.

செருக்கு எவ்வகையில் தீங்கு புரிகின்றது என்று நோக்கினுல், அஃது அடிப்படைக் குற்றமாதல் விளங்கும். 'யான்' என்று எழுகின்ற செருக்கு, தன்னையே பெரியவனுக மதித்துப் பெரியோர் கூறும் அறிவுரைகளைத் துச்சமாகக் கருதச் செய்கின்றது. எனவே, இஃது அறிவை அழிக்கின்ற ஒன்ருதல் விளங்கும். அறிவு அழிந்தால், அதன்பின்பு வேறு என்ன நன்மை உண்டாகும்! இவ் அழிவுச்செயல், அச்செருக்கை உடையவர்கட்கே தெரியமாட்டாது. எனவே, செருக்கு நன்மை செய்வதுபோலவே காட்டித் தீமை விளைக்கின்ற ஒன்ருகும்.

இச்செருக்கு, மும்மலங்களுள் முதலாவதாகிய ஆணவ மலத்தின் காரியமே. ஆணவ மலத்தைச் சைவசமயம் தவிர ஏனைய சமயங்கள் அறிந்தில. அதனுல், அவை, 'செருக்கிற்குக் காரணம் இது' எனக் கூறமாட்டாமல் தடுமாறுகின்றன.

"ஒருபொருளும் காட்டாது இருள்உருவம் காட்டும்;
இருபொருளும் காட்டாது இது"

என்ற திருவருட் பயனின்படி ஆணவம் தன்னுல் பற்றப்பட்டவர்களாலேயே அறியப்படாமல் நின்று தீங்கு விளைக்கின்றது. அதனுல் இதை, "பொல்லாத ஆணவம்' என்ருர் அருணந்தி சிவாசாரியார்.

உயிர்களின் அறிவை மறைக்கின்ற ஆணவம் கண்ணை மறைக்கின்ற இருள்போன்றது. இருள் முற்ற நீங்குவது சூரியனுலே. அதுபோல ஆணவம் முற்ற நீங்குவது சிவபெருமானது திருவருளாலே. ஆணவத்தினுல் முதலில் 'யான்' என்பதும், பின்பு அதுவழியாக 'எனது' என்பதும் தோன்றும். இவ்விரண்டையுமே திருவள்ளுவர் 'செருக்கு' எனக் கூறி, 'அவை நீங்கினுலே உயர்கதி உண்டாகும்' என்கின்ருர்.

"யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"

என்பது அக்குறள். சிவபெருமான் ஆணவத்தை நீக்கி அருள்புரியும் நிலையே, 'சத்திநிபாதம்' எனப்படுகின்றது. அதன் பொருட்டுச் சிவபெருமான் செய்கின்ற ஒறுப்பும், 'கருணை – மறக்கருணை' என்றே சொல்லப்படும். 'சிவ பெருமான் திரிபுரத்து அசுரர்போன்ற சிலரை அழித்த தாகக் கூறப்படும் வரலாறுகள் அருட் செயலை விளக்குவ தாகுமோ' என்று ஐயுறுவார்க்கு அவ் ஐயத்தை நீக்க எழுந்ததே,

"கொன்றது வினையைக் கொன்று
நின்றஅக் குணம் என்று ஓரார்"

என்றது சிவஞானசித்தி. எனவே, ஆமை ஓடு, ஏன எயிறு இவற்றைச் சிவபெருமான் அணிந்தமை, ஆணவத்தை அறுத் துச் சத்திநிபாதம் வருவித்தலையே குறிப்பதாதல் அறியப்படும். அதனால் யானையை உரித்து அதன் தோலையும், சரப வடி வாய்த் தோன்றி நரசிங்கத்தை அழித்து அதன் தோலைப் போர்த்தமை முதலிய வரலாறுகளையும் தோத்திரங்களாகிய திருமுறைகள் ஆங்காங்கு எடுத்தோதிப் புகழ்தலும் இது பற்றியேயாதல் விளங்கும். இவ்வாறு தோத்திரங்களின் பொருளைச் சாத்திரக் கண்கொண்டு நோக்கி, 'யான், எனது' என்னும் செருக்கு நீங்கிச் சிவனருள்பெற்று வாழ்தல் சிறப் புடை மக்கட்குத் தகுவதாம்.

---

## சொக்கநாத வெண்பா

வறிஞர் தமையொக்க வைக்குமன்னர் போல
அறிஞர் தமையாள்வ தன்றிப் — பொறிபுலனால்
வெம்புவேன் தன்னை விடுத்தாள்வ தேபாரம்
சம்புவே சொக்கநா தா. 6

என்னால் உனையடைய வல்லேன் எனில்இடரில்
இந்நா ளளவும் இருப்பேனோ — பன்னாகம்
பூண்டவா வேணிப் புனிதா மதுரைநகர்
ஆண்டவா சொக்கநா தா. 7

— ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள்.

# திருவருட்பயன் விளக்க உரை

( மலர் 30, இதழ் 1, பக்கம் 49 இன் தொடர்ச்சி )

## 2-ம் அதி. உயிரவை நிலை

அஃதாவது, உயிர்த்தொகுதியது இயல்பு. ‘உயிர்’ என்று ஒழியாது, ‘தொகுதி’ என்றதனால், ‘உயிர்கள்தாம் எண்ணில’ என்பது போந்தது. இனி, ‘அவை’ என்பதனை ‘தொகுதி’ என்னுது, பகுதிப்பொருள் விகுதியாக்கின், ‘உயிரவை யிற்றின்’ என்னும் சாரியை தொகுத்தலாயிற்றும். உயிர்களைப் பலவாகக் கூறிய இதனுனும், மேலையதிகாரத்துக் கூறப்பட்ட, பதி ‘ஒன்றே’ என்பது போதரும்.

இவ்வதிகாரத்தின் முதற்குறள்,

“ பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை ”

எனவரும்.

இதன்பொருள் : துறந்தோர் துறப்போர் தொகை - பற்றற்று வீடுபெற்றவர், இனி அவ்வாற்றுன் வீடுபெற இருப்பவர் இவரது எண்ணிக்கை முறையே; பிறந்தநாள் மேலும் பிறக்கும் நாள் போலும் - அவர் இதுகாறும் பிறந்து இறந்து உழன்ற நாட்கள், இனி அவ்வாறு உழலவேண்டிய நாட்கள் இவற்றது எண்ணிக்கையோடு ஒக்கும்.

விளக்கவுரை : இஃது, ‘‘ இறந்தாரைஎண்ணிக்கொண் டற்று $ வன்பாற்கண் வற்றல் மரந்தளிர்த் தற்று ” † என்றாற்போல, கூடாமை பற்றிவந்த உவமை. எனவே, ‘ இரு திறத்தாரும் அளவிலர்’ என்றதாயிற்று. உவமையும், பொருளும் வந்த இருதொடர்களும் உம்மைத் தொகைகள். அவை நிரல் நிறை வகையால் தம்முள் இயைந்து நின்றன. பிறந்த நாள் துறப்போர்க்கும் உரியவேனும் இனிப் பிறக்கும் நாள்களையே

---

$ குறள் - 22. † குறள் 78.

அவருக்கு உரித்தாக ஓதினர், 'அவரது இழிவு காரணமாக அவர் இரங்கத்தக்கவர்' என்பதும், முன்னர்க் கூறப்பட்ட வர்க்குப்போலத் தாம் முன்னர்ப் பிறந்த நாள்களால் பெரும் பயன் பெற்றிலர்' என்பதும் உணர்த்தற்கு.

செய்யுளாகலின், 'அவர்' என்னும் சுட்டுப்பெயர் முதற் கண் எஞ்சிநின்றது. "துறந்தோர்" என்றது, 'வீடு பெற்றோர்' எனத் தன் காரியமும் உடன் தோன்ற நின்றது. "தொகை" என்பது உவமைக்கண்ணும் சென்று இயையும். 'உயிர்கள்' எண்ணில எனக் கூறியொழியாது, இவ்வாறு வகுத்தும், உவமைபுணர்த்தும் ஓதினர், 'இருதிறத்தாரும் எண்ணிலர்' என்பது இனிது விளங்குதற் பொருட்டும், அவரிடையுள்ள உயர்வு இழிவுகள் தோன்றுதற் பொருட்டும். "துறந்தோர், துறப்போர்" என உயர்திணையாகவைத்து ஓதியது, மேற் கூறியவாறு பொதுப்படக் கூருது, வகுத்தோது கின்ருராதலாலும், அதற்கேற்ப வீடு பெறுதற்கு வாயிலாகும் பிறப்புப் பெரும்பான்மையும் மக்கட்பிறப்பேயாதலாலும் என்க. எனவே, 'இவ்வாறு ஓதினரேனும், அனைத்துயிர்களையும் தொகுத்தோதுதல் கருத்து' என்பது பெறப்பட்டது.

இதனல், உயிர்கள் எண்ணிலவாதல் கூறப்பட்டது. 'பல்லுயிர்' எனவும், 'மன்னுயிர்' எனவும் வரும் வழக்குக் கள் இதனை வலியுறுத்தும் என்ப.

இரண்டாவது குறள்,

"திரிமலத்தா ரொன்றதனிற் சென்ருர்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்"

எனவரும்.

இதன் பொருள்: திரிமலத்தார் - மேற் கூறப்பட்டார் அனைவரும் மும்மலமும் உடையவர் எனவும்; அதனில் ஒன்று சென்ருர்கள் - அந்நிலையினின்றும் ஒன்று நீங்கிய இருமலம் உடையவர் எனவும்; அன்றி ஒருமலத்தாராயும் - அவரேயன்றி ஒருமலமே உடையர் எனவும்; உளர் - இங்ஙனம் தனித்தனி மூன்று திறத்தினராய் உள்ளார்.

விளக்கவுரை : 'அவர்' என்னும் எழுவாய், மேலைக் குறளினின்றும் வருவிக்க. "ஆயும்" என்பது, ஏனை இரண்டிடத்தும் சென்று இயையும். "அதனில்" என்றதில் சுட்டுப் பெயர், அந்நிலைமேல் நின்றது. 'அவற்றில்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். "அன்றி" என்பது 'மற்று' என்னும் பொருட்டு. மும்மலத்தார், 'சகலர்' எனவும், இருமலத்தார் 'பிரளயாகலர்' எனவும், ஒருமலத்தார், 'விஞ்ஞானகலர்' எனவும் பெயர் கூறப்படுவர். சகலர் - கலையோடுகூடியவர். அகலர் - கலையில்லாதவர். கலை - மாயா காரியம். 'விஞ்ஞான கலர்' என்பது, 'விஞ்ஞானகலர்' என மருவி வழங்கும். விஞ்ஞானகலர் - விஞ்ஞானத்தால் (விசேடஞானத்தால்) கலை அற்றவர். பிரளயாகலர் - பிரளயத்தில் (உலகம் ஒடுங்கிய காலத்தில்) கலையற்றவர். பரமுக்தி பெற்றவருள் இவ் வேறுபாடு இல்லையேனும், அதற்குக் கீழ் அபரமுத்தி பதமுத்தி நிலைகளில் இவ்வேறுபாடு இருத்தலின் மேல், "துறந்தோர்" எனக் குறிக்கப்பட்டவர்க்கும் இது கூறினர். எனினும், 'துறப்போர்க்கே இவ்வேறுபாடு சிறந்தது' என்க.

இதனுல், அனைத்துயிரும் மூன்று திறத்தனவாதல் கூறப் பட்டது.

மூன்ருவது குறள்,

"மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை."

எனவரும்,

இதன்பொருள்: மூன்று திறத்து உள்ளாரும் - மேற் கூறிய மூன்றுவகை உயிர்த்திறத்தில் உள்ளவரும்; மூலமலத்து உள்ளார்கள் - மூலமாகிய ஆணவத்தில் அகப்பட்டுள்ளார்கள்; தொத்து உள்ளார் - அவருள் மாயையுள் அகப்பட்டுள்ளவரே: துணை தோன்றலர் - உயிர்க்குத் தோன்ருத் துணையாகிய பதி யுண்மை தோன்றப்பெருது மயங்கும் சகலராவார்.

விளக்கவுரை : எனவே, 'அகலர்' எனப்பட்ட ஏனை இருவர்க்கும் மாயை இல்லை என்றதாயிற்று' எல்லாரும் மூல

மலம் உடையர்' என்றதனால், 'ஒருமலம் உடையராய விஞ்ஞானகலர் ஆணவம் ஒன்றே உடையர்' என்பதும் 'அகலர்க்கு மாயை இல்லை' எனவே, 'இருமலம் உடையராய பிரளயாகலர் ஆணவம், கன்மம், என்னும் இவற்றை உடையர்' என்பதும் போந்தன. "துணை தோன்றலர்" என்றது, 'சகலர்' என்பதனைக் குறிக்கும் குறிப்புமொழியாய் நின்றது.

"மூவகை ஆருயிர் வருக்கம், 'மலத்தார், கன்ம
மூலமலத் தார்மூன்றும் உடையார்' அன்றே"

என இவ்வாசிரியர் தாமே சிவப்பிரகாசத்துள் * அருளியதும்,

"உரை தரும்இப் பசுவருக்கம் உணரின் மூன்றும்;
உயரும்விஞ் ஞானகலர், பிரளயாகலர், சகலர்
நிரையில்மலம், மலம்கன்மம், மலம்கன்மம்மாயை நிற்கும்"

என அருணந்திதேவர் தமது சிவஞானசித்தியுள் $ அருளிச் செய்ததும் காண்க.

மும்மலங்களுள் ஆணவமலத்தை 'மூலமலம்' என்றதனால், 'அதனை ஒட்டியே ஏனை இருமலங்களின் பிணிப்பும் உளவாகின்றன' என்பது பெறப்படுகின்றது. படவே, சகலர் முதலிய முப்பிரிவும் அம் மூலமலம், 'தூல தரம், தூலம், சூக்குமம்' என்னும் வகையில் பிணித்துள்ளமை காரணமாகவே அமைந்தன என்பதும் பெறப்படும்.

இயற்கையாய் உள்ள தன்மைக்கேற்ப அமைந்த இப் பிணிப்பு வேறுபாட்டினால் உள்ள விஞ்ஞானகலர் பிரளயாகலர் போலச் சகலருள்ளும் சிலர் தவத்தால் மாயை கன்மங்களின் நீங்கி அவரோடு ஒப்பநிற்பர் என்க. தொத்து, பல்வேறு வகைப்பட்ட ஆற்றல்களின் தொகுதி.

இதனால், மூன்று திறத்துள்ளார்க்கும் உள்ள பிணிப்பு நிலை கூறப்பட்டது.

(தொடரும்)

---

* - 8. $ சூத்திரம். 8. 2.



# யமன்

வேதாந்த சிரோமணி,

**பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரிகள்**

தெற்குத் திக்கிற்குத் தலைவன் யமன். நண்பரிடமும் பகைவரிடமும் சமமாக இருப்பவன் ஆதலால் ஸமவர்த்தீ எனவும், பிராணிகளுக்கு முடிவைச் செய்பவனாதலின் கிருதாந்தன், அந்தகன் எனவும், அக்னிஷ்வர்த்தர் பர்ஹிஷதர் முதலிய பித்ருக்களுக்குத் தலைவன் ஆனதுபற்றி பித்ருபதி எனவும், யமுனையின் சகோதரனாதலின் யமுனாப்ராதா எனவும் தென்புலத்தாரைக் குறித்துச் செய்யப்படும் சிராத்தத்திற்குத் தேவனாதலால் சிராத்ததேவன் எனவும், தண்டாயுதம் தரித்தபடியால் தண்டதரன் எனவும், சூரியனுடைய பிள்ளையாதலின் வைவஸ்வதன் எனவும், பிரேதங்களுக்குத் தலைவன் ஆதலின் ப்ரேதராட், பரேதராஜன் எனவும், பாபிகளை அடக்குபவனாதலின் யமன் எனவும், அறக்கடவுளாதலின் தர்மராஜன் எனவும் பற்பல பெயர்களால் கூறப்படுகிறான்.

காச்யப சில்ப சூத்திரத்தில் யமனுடைய ரூபம் பின்வருமாறு கூறப்படுகிறது.

> द्विभुजः कृष्णवर्णश्च खड्गखेटकसंयुतः ।
> करालदंष्ट्रवदनो रक्तमाल्यानुलेपनः ॥
> रक्तवस्त्रधरश्चोग्रः किरीटमकुटान्वितः ।
> दीप्ताग्निसदृशाक्षश्च महामहिषवाहनः ॥

இரண்டுகை, கருத்தநிறம், பயங்கரமான தத்திப்பல்லுடன் கூடிய முகம், சிவந்தமாலை, வஸ்திரம், சந்தனம், கிரீடம், மகுடம், பிரகாசிக்கும் தீயைப்போன்றகண், கத்தி, கேடயம் இவற்றையுடையவனாயும் பெரிய எருமையை வாஹனமாகக் கொண்டவனாகவும் யமன் விளங்குகிறான்.

वैवस्वतस्य पार्श्वे तु समीपस्थौ ग्रहोग्रकौ ।
चित्रगुप्तः किन्नरश्च द्वारपार्श्वे तु संस्थितौ ॥
कृष्णश्यामनिभौ तौ च रक्तवस्त्रधरावुभौ ।
पीठपार्श्वे स्थितौ मृत्युसहितावुग्रतेजसौ ॥
नीललोहितसंकाशे द्वे चामरकरे स्त्रियौ ।
पुरतः संस्थितौ विप्रशर्मचर्मसमाह्वयौ ॥
यमः सिंहासनासीनः महिषोपरि वा स्थितः ।

யமனுக்குச் சமீபத்தில் க்ரஹன் உக்ரஹன் என்பவரும், வாயிலுக்குப் பக்கத்தில் சித்ரகுப்தனும் கிந்நரனும் இருப்பர். இவ்விருவரும் சிவந்த ஆடை யுடுத்தியவர். சித்ரகுப்தன் கருத்த நிறமுடையவன். கிந்நரன் ச்யாமநிறம் (புகைபோன்ற கருப்பு நிறம்) மிருத்யுவுடன் உக்ரமான காந்தியுடையவராய் இருப்பர். கருப்பு சிவப்பு நிறமுடைய இரண்டு பெண்கள் சாமரம் எந்திய கையினராய் இருப்பர். எதிரில் விப்ரசர்மா, சர்மா என்ற பெயருடைய இருவர் இருப்பர். யமன் சிம்மாசனத்திலோ, எருமையின்மேலோ வீற்றிருப்பான் என்றும் கூறும். சுப்ரபேதாகமம்,

यमं सदण्डहस्तं तु महिषासनसंस्थितम् ।
करालं कालवर्णं च फलपल्लवधारिणम् ॥

பயங்கரமாயும், கருத்த நிறமுடையவனாயும், தண்டம், பழம், தளிர் இவற்றைத் தரித்தவனாகவும் கூறுகிறது.

"பூமன் சிரம்கண்டி அந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கடவூர் இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே"

என்று கூறப்படும் அட்டவீரட்டங்களுள் ஒன்றாகிய திருக்கடவூரில் யமன் சூலத்தையும் பாசத்தையும் தாங்கிய இரண்டு கைகளையும், கூப்பிய இரண்டு கைகளையும் உடையவராய் விளங்குகிறார். சிவபெருமானின் அருளைப் பெறுவதற்காகப் பூசைசெய்த தருமபுரத்தில் புஷ்பமும், புஷ்பபாத்திரமும் கைகளில் ஏந்தியிருக்கிறார். மற்ற இருகைகளில் சூலமும் பாசமும் உள்ளன.

இவ்விதம் ஒவ்வொரு மூர்த்தியிலும் பேதம் காணப்படினும் தியானிக்கும்நிலை, பூசிக்கும்நிலை, தண்டிக்கப்படும்நிலை, தண்டிக்கும்நிலை முதலிய நிலையின் பேதத்தாலும், மீமாம்ஸா சாஸ்திரத்தின் சித்தாந்தப்படி யமன், தர்மராஜன், காலன், மிருத்யு முதலியோர் வெவ்வேறு தெய்வமாதலாலும் எல்லா ஸ்வரூபமும் விருப்பத்திற்கேற்பத் தியானிக்கத்தக்கதேயாகும்.

திக்பதிகளின் தியானத்தைக் கூறுமிடத்தில்,

पाथः संयुतमेघसन्निभतनुः प्रद्योतनस्यात्मजः -
नृणां पुण्यकृतां शुभावहवपुः पापीयसां दुःखकृत् ।
श्रीमद्दक्षिणदिग्पतिर्महिषगो भूषाम्बरालङ्कृतः
ध्येयः संयमिनीपतिः पितृगणस्वामी यमो दण्डभृत् ॥

என்று சொல்லப்படுகிறது.

இவனுடைய பட்டணம் ஸம்யமிநீபுரம். வாஹனம் எருமை. கொடியும் எருமையே. இவன் ஏகாதசி திதிக்கும் பரணி நக்ஷத்திரத்திற்கும் அதிதேவதை. தெற்குத்திக்கில் உள்ள களிறு வாமனம் என்றும், பிடி பிங்களை என்றும் கூறப்படும். பாசம், தண்டம், சுரிகை, குடாரம் இந்த நான்கும் ஆயுதம். ஔதும்பரன், சண்டாமிருகம், சம்பரன், சார்த்தூலன் நால்வரும் முக்கிய தூதர்கள்.

த்வஷ்டாவின் பெண்ணான ஸம்ஞாதேவியிடம் சூரியனுக்கு மனு, என்ற பிள்ளையும் யமன் யமீ (யமுனா) என்ற இரட்டையரும் பிறந்தனர். யமன் தன் தங்கையான யமியைக் காதலிப்பதாகவும் அவள் மறுத்து தர்மங்களை உபதேசிப்பதாகவும் ரிக்வேதம் பத்தாம் மண்டலத்திலுள்ள பத்துமுதல் நான்கு சூக்தங்களில் கூறப்படுகிறது. இது யமயமீஸம்வாதம் என்று கூறப்படும்.

யமனுடைய சபை மகாபாரதம் சபாபர்வம் எட்டாவது அத்தியாயத்திலும், கருடபுராணம் பதினான்காவது அத்தியாயத்திலும் வர்ணிக்கப்படுகிறது. பத்துயோசனை விஸ்தீர்ணமுள்ள மண்டபத்தில் கோரரூபத்துடன், ஒருபுறத்தில் தூதராலும், மறுபுறத்தில் நோய்களாலும் சேவிக்கப்பட்டவனாய்

இருக்கிறான். அதற்குச் சமீபத்தில் யமனின் கணக்கனாகிய சித்திரகுப்தன் மற்றொரு மண்டபத்தில் இருக்கிறான். அம் மண்டபத்தின் கிழக்கே ஜ்வரம், தெற்கே சூலேநோய் வைசூரி, மேற்கே அருசி அஜீர்ணம், வடக்கே வயிற்றுவலி, வடகிழக்கே தலைவலி, தென்கிழக்கே மயக்கம், தென்மேற்கே அதிசாரம், வடமேற்கே ஜன்னி என்ற நோய்கள் சித்திரகுப்தனின் கட்டளையை எதிர்பார்த்து நிற்கின்றன என்று வர்ணிக்கப்படுகிறது.

வேதத்தில் காடகம் என்ற பகுதியிலும், கடோபநிஷத்தினும், வராஹ புராணம் 193 ஆவது அத்தியாயம் முதற் கொண்டும் நசிகேத உபாக்யானம் உள்ளது. வாஜச்வரஸர் என்ற முனிவர் யாகம் செய்து தக்ஷிணையாக பயனற்ற பல பசுக்களைக் கொடுத்தார். "பயனற்ற பசுக்களைத் தானம் செய்தால் நல்லுலகம் கிடைக்காது. தந்தை எனக்காகவல்லவா நல்ல பசுக்களை மீத்துவைக்கிறார்" என்று எண்ணி அவருடைய பிள்ளையாகிய நசிகேதன் தந்தையிடம் சென்று "தந்தையே! என்னை யாருக்குத் தானம் செய்யப்போகிறீர்?" என்று பல முறை கேட்டான். சினமடைந்த தந்தை, "யமனுக்கே உன்னைக் கொடுத்தேன்" என்று சொன்னார். நசிகேதன் தந்தை கோபத்தால் சொன்னபொழுதும் அவருடைய சொல் உண்மையாக ஆகவேண்டும் எனக் கருதி யமலோகம் சென்றான். அந்தசமயம் யமன் ஊரில் இல்லாமையால் மூன்று நாட்கள் அவனுடைய வீட்டில் பட்டினியாக இருந்தான். மூன்றுநாட்கள் கழித்து வந்த யமன் வந்த விருந்தினன் பட்டினியாக வீட்டில் தங்கியிருந்ததால் தனக்கும், தன் செல்வத்திற்கும் அழிவு உண்டாகும் என அஞ்சி அவனுக்கு மூன்று வரங்களைக் கொடுத்தான். ஆத்மவித்யைப்பற்றி கடோபநிஷத்திலும், "நாசிகேதாக்னிசயனம்" என்ற வேள்வியைப்பற்றி காடகம் என்ற வேதபாகத்திலும், யமலோகம், நரகங்கள் இவற்றைப்பற்றி வராஹ புராணத்திலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. நரகவர்ணனையும் உள்ளது.

பதிவிரதைகளுக்குள் சிறந்த சாவித்திரியைப் பற்றிய கதை மகாபாரதம், தேவிபாகவதம், வராஹபுராணம் முதலிய பலவிடங்களில் கூறப்படுகிறது. கதை ஒரே வகையாக இருப்பினும் தேவிபாகவதம் பதினோராவது ஸ்கந்தத்தில் முப்பத்தாறுவது அத்தியாயத்தில் சாவித்திரியினால் துதிக்கப்பட்ட "யமாஷ்டகம்" என்ற ஒரு துதியுள்ளது. (தொடரும்)

# ஆழ்வார் அழகநுபவம்

செஞ்சொற்கொண்டல், புலவர்,

திரு. சொ. சிங்காரவேலன் M. A., Dip.Ling.

( மலர் 30. இதழ் 2. பக்கம் 89 இன் தொடர்ச்சி )

திருமங்கையாழ்வார் :

திருமங்கை யாழ்வாரும் ஒவ்வொரு தலங்கட்கும் சென்று பேரழகை அநுபவித்துக் கவிமாலை பல புனைந்து கரிய மாணிக்கத்தின் கழலடிகளில் கனிந்து சார்த்திக் களிக்கின்றார்.

" கைம்மான மழகளிற்றைக் கடற்கிடந்த கருமணியை
மைம்மான மரகதத்தை மறையுரைத்த திருமாலை
எம்மானை எனக்கென்றும் இனியானைப் பனிகாத்த
அம்மானை யான்கண்ட தனிநீர்த்தென் னரங்கத்தே." (6-1)

என்றெல்லாம் கனிந்து பாடி மகிழ்கின்றார் இவர். நின்ற, இருந்த, கிடந்த திருக்கோலப் பேரழகில் ஈடுபட்ட ஆழ்வார்க்குத் திருநறையூர்க் கிடந்தநம்பி கிளர்ச்சியை அருள்கின்றார்.

" கிடந்த நம்பி குடந்தை மேவிக் கேழலாய் உலகை
இடந்த நம்பி எங்கள் நம்பி எறிஞர் ஆணழியக்
கடந்த நம்பி கடியாரிலங்கை உலகை யீரடியால்
நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோநாராயணமே." (10-1)

என்று பாடிக் களிக்கின்றார்,

திருநாகையில், நிற்கின்ற பெருமானின் பருவத்தையும், மேன்மையையும், வடிவழகையும், ஒப்பனையையும் காண்கின்றார் ஆழ்வார்; அவ்வழகு உரு வெளிப்பாடாக எங்கெங்கும் தோன்றுகின்றது. அவன் அழகு மறக்க வொண்ணாதபடி

உருவு வெளிப்பட்டுத் தோன்றுதலால் வருந்துகின்றேன்' என்று தோழி ஒருத்திக்கு நங்கை யொருத்தி நவிலுவதாக வியந்து பாடுகின்றார்: அழகின் சோதி - அழகின் சுடர் - அழகின் வெள்ளம் - அழகின் மலர்ச்சி - அழகின் கடல் - அழகின் சாரல் - அழகின் கானம் - அழகின் சிரிப்பு எப்படி எப்படி யெல்லாம் கவிதைச் சித்திரம் ஆகிறது! உணர்ச்சி குமிழியிடச் சொற்கள் கும்மாளமிட்டுக் கொண்டு ஓடிவருகின்றன:

" பொன்னிவர் மேனி மரகதத்தின்
பொங்கிளஞ் சோதி அகலத்தாரம்
மின்னிவர் வாயில்நல் வேதம்ஓதும்
வேதியர் வானவர் ஆவர்தோழீ !
என்னையும் நோக்கியென் னல்குல் நோக்கி
ஏந்திளங் கொங்கையும் நோக்குகின்றார் !
அன்னையென் னேக்குமென் றஞ்சுகின்றேன்
அச்சோ ஒருவர் அழகியவா !" (9-2-1)

முதற்பாட்டு முடிந்தபின்னும் ஆழ்வார் மகிழ்ச்சி அலையிட்டுப் பாய்கின்றது:

" ஆடகம் பூண்டொரு நான்கு தோளும்
அச்சோ ஒருவர் அழகியவா !" (2)

" ஆயிரம் தோளொடிலங்கு பூணும்
அச்சோ ஒருவர் அழகியவா !" (3)

" அம்பவளத் திரளேயும் ஒப்பர்
அச்சோ ஒருவர் அழகியவா !" (4)

" ஆழியொன் றேந்தியோர் சங்குபற்றி
அச்சோ ஒருவர் அழகியவா !" (5)

என்றெல்லாம் பாடிக் களிக்கூத் திடுகின்றாரிவர். அஞ்சனமலை (6) அணிகெழு முகில் (7) என்றெல்லாம் உவமை கூறியும் மகிழ்கின்றார்.

இராமாவதாரத்திலும், கிருட்டின அவதாரத்திலும் ஆழ்வார் ஈடுபட்டுப்பாடும் கவிதைகள் பலப்பல. மாயன் வெண்ணெய் உண்ட அழகு ('எங்காணும்') கண்ணன் செய்தியைக் குறித்து ஆய்ச்சியர் முறையீடு (''மானமுடை'') ஆய்ச்சி ஒருத்தியின் ஊடல் ('' காதிற் கடிப்பு '') பறவைகளைத் தூதுவிடல் ஆகிய பலபொருள்களில் பாடுகின்ற இனியகவிதை ஓவியங்கள் மெய்ப்பாடும் உருக்கமும் உடைய மேதகவுடையவை.

முதலாழ்வார் :

பொய்கையாழ்வார் தம்முதல் திருவந்தாதியில், பெருமாள் திருமேனியில், ஏற்றுனையும் புள்ளூர்ந்தானையும் எயிலிடந்தானையும் கண்டு அநுபவிக்கின்றார். (74) '' புனக்காயாம்பூ ' மேனிகாணப் பொதியவிழும் பூவைப்பூ மாமேனி '' (89) என்று வடிவழகை வாழ்த்துவார். ஞானச்சுடர் விளக்கேற்றி நாரணனது ஞானத்தமிழ் '' புரிந்து பூதத்தாழ்வார் அழகநுபவத்தில் தோயவைக்கின்றார். இரண்டாந் திருவந்தாதி முற்றும் அவரது அருளநுபவமே. '' கண்டேன் திருமேனி யான கனவில் ஆங்கவன் கைக்கண்டேன் கனலும் சுடராழி கண்டேன் ' (67) என்று எக்களிப்பு எய்துவார் இவர். இவ்வாறு அழகைக் கண்டு அருள் பெற்ற இவர்,

'' யானே தவம் செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவம் உடையேன் எம்பெருமான் யானே
இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது '' (74)

என்றும் தம்மை வியந்து அருள் இறுமாப்படைவதுண்டு. இவ்வாறே பேயாழ்வாரது மூன்றாந் திருவந்தாதி முற்றும், அவர் பெற்ற அழகநுபவமே. '' திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும் அருக்கன் அணிநிறமும் கண்டேன் '' (1) என்று தொடங்கி '' வானமரும் மின்னிமைக்கும் வண்டாமரை நெடுங்கண் தேனமரும் பூமேல் திரு '' (100) எனமுடித்துப் பேரழகை கவி ஒளியிற் காட்டுகின்றார் இவர். கார்வானத்தின் பேரழகில் திருமால் நிறம்கண்டு கனிந்துநிற்பார் இவர் (86) ' பூமங்கை கேள்வன் பொலிவில் ' மயங்கியவர் இவ்வருளாளர். (56)

" தானே தனக்குவமன் ; தன்னுருவே யெவ்வுருவும்
தானே தவவுருவந் தாரகையும் — தானே
எரிசுடரும் மால்வரையும் எண்டிசையும் அண்டத்து
இருசுடரும் ஆய இறை " (35)

என்று அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத அழகனை அழகான கவியிற்பாடி அழகை மேலும் பெருக்குகின்றார் ஆழ்வார்.

இங்ஙனம் நாலாயிரத்துள் வரும் பெரும்பாலான பாட்டுக்கள் அழகநுபவம் பற்றிய அருங் கவிதைகளாகவே அமைந்துள்ளன. கார்முகில் வண்ணனது கவின் எவ்வாறெல்லாம் கவிப் பெருக்கில் கலந்துள்ளது என்று சிந்திப்பதே ஒப்பற்ற இன்பம்.

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi

" The uniform cleanliness of the Dharmapuram Adhinam temple is seen in this temple also. The awe and reverence this temple inspire in the minds of the devotees is unique. The great Saint Sambandar had his unique privilege of having the Alimghty his mother end father at his early age of three. I am very much impressed with this temple."

(Sd.) P. R. Gokulakrishnan,

24-1...71 Judge, High Court,

Tamil Nadu.

# திருவையாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி

## மூலமும் - உரையும்

உரையாசிரியர் :-

பண்டித வித்துவான், தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை

(மலர் 30, இதழ் 2, பக்கம் 79 இன் தொடர்ச்சி)

### தமிழாசிரியர் துதி

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

ஆயபா கவதர் போற்றும் அந்துழா யலங்கற் றிண்டோள்
மாயவன் வடிவைப் பல்லோர் வணங்குமா விளக்க மாக்கி
யேயமா மலயம் வைகி யினியசெந் தமிழ்வி ரித்த
தூயமா முனிவ ரன்பொற் றுணையடிக் கன்பு செய்வாம்.

(இ - ள்) ஆய பாகவதர் - மறந்தும் புறந்தொழா மாந்தராகிய பத்தர்கள், போற்றும் - போற்றுதலைச் செய்யும்; அம் துழாய் அலங்கல் திண்தோள் மாயவன் - அழகிய தேனை வடிக்கின்ற துளசி மாலையினை யணிந்த திண்ணிய வலிய திருத்தோள்களையுடைய திருமாலாகிய தேவரை; பல்லோர் வணங்கும் ஆறு - பலரும் வழிபட்டு முத்தியின் பினை யெய்தும்படி, இலிங்கம் ஆக்கி - சிவலிங்கம் வடிவமுறச் செய்து, (குறுகுறு குற்றாலம் என இலிங்கமாகக் குழைத்துப் பண்ணி) பின்னர், ஏயமா மலயம் வைகி - பல்வளம் பழுநிய பெருமையுடைய பொதிய மலையில் வதிந்தருளி, இனிய செந் தமிழ் விரித்த - ஒலி வடிவாலும் சொல் வடிவாலும் பொருள் வடிவாலும் இனிய இயல் இசை நாடகம் எனும் முத்தமிழ் ஆம் செவ்விய இனிய தமிழை விரித்தருளிய, தூய மாமுனி வரன் - தூய்தான நல்லொழுக்கப் பெருமைவாய்ந்த முனி வரர்க்கெல்லாம் முதன்மையானவராகிய அகத்திய மகாமுனிவ ருடைய, பொன் துணையடிக்கு அன்பு செய்வாம் - அழகிய இரு

திருவடிகளுக்கும் அன்புமேற்கொண்டு துதித்து வணங்குவாம். தமிழ்க்குரவு பூண்டவராகலின் தமிழாசிரியர் எனப்பெற்றனர்.

(கு - ரை) முனிவரன் - முனிவர்களுள் வரனுயுள்ளான் என்பார் மாமுனிவர் என்ருர். மாயவன் - மயக்குவன். (கரியன்). மலயம் - பொதியமலே. அலங்கல் - மாலே. அடிக்குடி - அடியின்கண். யாம், எழுவாய், செய்வாம், பயனிலே.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் துதி

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

ஈம மீது மாத ரென்பி னிற்புரண்ட விண்டுபோற்
ரும லேந்தி டாது செந்த மிழ்ப்பண்(ணே)ஓதி யென்பினே
வாம மங்கை யாக்கிடுஞ்சி றந்த சண்பை மன்னர்தாள்
நேம மோடி றைஞ்சி முக்க ணித்தனேப்ப ழிச்சுவாம்.

(இ - ள்) ஈமமீது மாதர் என்பினில் புரண்ட விண்டு போல் - சுடலேயின்கண் சலந்தரன் மனேவியாகிய பிருந்தா தேவியின் (இறந்துபட்ட) எலும்புக்குவியலினிடத்து விகாரங் காரணமாகப் புரண்டு மயங்கிய திருமாலினேப்போல், தாம் அலேந்திடாது - தாமும் கிடந்து வருத்தமுருது, செம் தமிழ் பண் ஓதி - செவ்விய தமிழ் மொழியின்கண் "மட்டிட்ட புன்னே யங்கானல் மடமயிலே" என்னு முதற்குறிப்பு தேவாரப் பண் ணினேப் பாடியருளி, என்பினேவாம மங்கை ஆக்கிடும்-அழகிய இளமங்கையாக்கி, பூம்பாவையாக்கி யெழுப்பிய அற்புதச் செயலினே யுடைய, சிறந்த - மேம்பாடுற்ற. சண்பைமன்னர் தாள் - காழியம்பதியில் கவுணியர் குலத்து அவதரித்த திருஞானசம்பந்தப் பிள்ளேயாருடைய திருவடிகளே, நேமம் ஒடு - நியமமுடன், இறைஞ்சி - வணங்கி, முக்கண் நித்தனே பழிச்சுவாம் - மூன்று கண்களேயுடைய என்று மழியாத முத்தி யுருவினனுகிய திருவையாற்றுப் பரமனே இந்நூல் யாத்துத் தோத்திரம் புரிவாம். (எ-று)

(கு-ரை) நித்தன்-என்றுமுள்ளவன். முக்கண்-சோமன் சூரியன் தீ ஆய கண்கள். பழிச்சல் - வணங்கல், துதித்தல். வாமம் மங்கை - அழகிய மங்கை. சிறந்த - மேம்பாடுற்ற,

பூம்பாவை. (தொண்டை நாட்டிலுள்ள மயிலாப்பூரில்) என்பினைப் பெண்ணாக்கிய வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது. யாம் - எழுவாய். பழிச்சுவாம் - பயனிலை, நித்தனை - செயப்படுபொருள்.

## திருநாவுக்கரசு நாயனர் துதி

( அறுசீர்க்கழிநெடிலடியாசிரியம் )

ஓலஞ் செறியா ழியிற்கற்றூ ணுறுநற் புணையாக் கரையேறி
யாலம் பொழிலின் வயிணவர்க ளகரத் தொடுமற்
றவர்களையு(ம்)
ஞாலம் புகழ வலைத்திடுவா னதியை யழைத்து மனமகிழுஞ்
சீலந் திகழ்வா கீசனடி சிந்தித் தையாறனைப் புகழ்வாம்.

( இ - ள்) ஓலம் செறி ஆழியில் கல்தூண் உறுநல் புனை ஆ(க)கரைஏறி - திரைகள் மிக்க, கடலின்கண், (சமணர்தம் தூண்டலால்) தன்னேடு கட்டிப் போடப்பட்ட கரும் கல்லாகிய தூணினையே தனக்குற்ற தெப்பமாக்கொண்டு கரையின்கண் அஞ்செழுத்தோதி ஏறிவந்து ம்) ஆலம் பொழிலின் - திருப்பூந்துருத்திக்கு மேல்பாலுள்ள தென்பாம்பைக்குடியின் மேய திருவாலம்பொழில் என்னுந்தலத்தின்கண் உள்ள, வயிணவர்கள் - வயிணவர்கள் (பொறுக்கொணுக் குறும்புகளைப்புரிய) அகரத தொடு(ம) மற்று அவர்களையும் - அவர்கள் வாழ்ந்த அக்கிரகாரத்துடன் அவ்வயிணவர்கள் அனைவரையும், ஞாலம்புகழ - அப்பர்பெருமான் செயலினைக்கண்டு உலகினுள்ளார் மிகப் புகழுமாறு அலைத்திடு - வருத்தும்படியாக, வான்நதியை அழைத்து - கங்கையாகிய காவிரியாற்றினை, அழைத்து - அடித்துக்கொண்டு போமாறு செய்தருளி, மன(ம்) மகிழும் சீலம் திகழ் வாகீசன் அடி - திருவுளம் மகிழும் நடையருப் பெருந்துறவுடைய திருநாவுக்கரசு பெருமான் திருவடிகளை, சிந்தித்து - தியானித்து வணங்கி. ஐயாறனை புகழ்வாம் - திருவையாற்றுப் பரமசிவனை அந்தாதித் தொடையாலாகிய நூலினைப்பாடிப் புகழ்வாம். (எ-று.)

(கு - ரை.) நாவுக்கரசர் பெருமானுடைய இரண்டு செயற்கரிய செயல்கள் குறிப்பிடப்பட்டுள. ஒன்று

கடலிடைக் கற்றூணெடு கட்டிப்போட்டபோது "சொற்றுணை வேதியன் சோதிவானவன்" எனும் குறிப்புடைய திருப் பாட்டினைப் பாடிக் கரையேறினமை. மற்றென்று - திருஞான சம்பந்தர், மதுரையிற் சமணர்களைவென்று அப்பர் பெரு மானைக் காணவேண்டுமெனும் பேரவாவுடன் எழுந்தருள்கை யில் எதிர்கொண்டழைக்கவும் திருவாலம்பொழில் திருக் கோயிற் புறமெலாம் புனிதமாக்கவும் ஏற்பாடு செய்தருளி யிருந்தனர். அகவீதியில் வாழ்ந்துகொண்டிருந்த வயிணவ மறையவர்கள் தூய்து அன்மையும் கோயிலுள்ளும் எச்சில் இலைகளைப் போடவும் செய்தனர். சுவாமிகளை அவற்றினைப் போக்கித் தூய்மைசெய்து விட்டு மனமாழ்கியிருந்தமை கண்ட பாலருவாயர் அவ்வயிணவர்களையும் அவர்கள் வாழ்ந்த வீடு களொடுபட்டவைற்றினையும் ஆற்றில் வெள்ளம் அடித்துக் கொண்டுபோகச் செய்யப்பட்டதும் ஆம். இஃது அவ்வூர்ப் புராணம் புகலாநிற்கும். ஞானம் - ஆகுபெயராய் சான்றோரை யுணர்த்திற்று. அளைத்திடுவான்-அளைக்கும்படி (வருந்தும்படி) நதி - காவிரியாறு. மற்று - வினைமாற்றில் வந்தது. அகரம் - மறையவர்வாழும் இடத்திற்குப்பெயர். அழைத்தும் - அழைப் பித்தும். சீலம் - ஒழுக்கம். யாம் - எழுவாய். புகழ்வாம் - பய னிலை. ஐயாறனை -செயப்படு பொருள்

(தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi.

நல்லமுறையில் இத் திருக்கோயில் வைக்கப்பட்டுள்ளதைக் கண்டு எம் பாராட்டுக்களைத் தெரிவிப்பதோடு இந்தப் பாடல் பெற்ற ஸ்தலத்தில் ஞானசம்பந்தருக்குக் கிட்டிய ஞானப்பால் எல்லாக் குழந்தைகளுக்கும் கிடைக்கத் தேவியை வேண்டு கிறேன்.

(ஒ-ம்) கி. விசாலாட்சி,

26—1—'71 மு. க. அ. தஞ்சை.




திருக்குறள்வேள்,

திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B, A.,

(மலர் 30. இதழ் 2, பக்கம் 83 இன் தொடர்ச்சி)

157 ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலே ஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே.

குறிப்புரை :- ஆர்த்தல் - ஒலித்தல். ஊர்கால் துறை - ஊர்வாய்க்கால் துறை. பிணத்தின் பின்னே செல்லும் சுற்றத்தார் முதலியோர் வாய்க்கால் துறையோடு நீங்குவர் என்க. வேர்த்தலை போக்கி - வாழ்வுக்கு அடிப்பாகமான தலையை மறைத்து. சுடுகாட்டில் தலையை மறைத்த பின்னரே தீ மூட்டுவர் என்க. நீர்த்தலைமூழ்குதல் - நீரில் தலைமுழுகுதல்.

சுடுகாட்டில் செய்யும் இறுதிச் செயல் கூறியவாறு.

158 வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றுங்
குளத்தில் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஓடென்று வைப்பர்
உடலுடைந் தால்இறைப் போதும் வையாரே.

குறிப்புரை :- வளத்திடை முற்றம் - வளப்பம் பொருந்திய இடையாகிய முன்னிடம். குளம் - கர்ப்பாசயம். மண் - சுரோணிதம். குயவன் - பிரமன். வனைதல் சிருட்டித்தல். பிரமனாகிய குயவன் இடையாகிய முன்னிடத்தில் குளமாகிய கருப்பையில் மண்ணாகிய சுரோணிதத்தைக் கொண்டு படைத்தலைச் செய்தான் என்க. குடம் - உடல். ஓடு - குடத்தில் உடைந்த பகுதி.

மண்ணால் செய்யப்பட்ட குடமாவது ஓட்டுக்கு ஆகும்; உடம்பு ஒன்றுக்கும் ஆகாது என்பதாம்.

159 ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒனபது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே.

குறிப்புரை :- ஐந்து தலைப்பறி - ஐம்பொறிகளாகிய பை. புறப்பொருள்களைப் பற்றிக்கொண்டு சேர்ப்பதனாலே பை என்க. ஆறு சடை - ஆறு ஆதாரங்கள் ; இவை சடைபோல் உடம்பில் உள என்க. சந்து - மூட்டு. சார்வு - இணைப்பு. பந்தல் - கட்டு. பந்தி - வரிசை. முப்பது, பதினெட்டு, பதினைந்து என்பவை எலும்புவகை. ஒனபது - ஒன்பது மண்டலங்கள்.

உடம்போடு வெந்த பின்னர் இவையெல்லாம் அழிந்தன என்பதாம்.

160 அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்
கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அறைக்கீரை வித்துண்ணா
கத்தி எடுத்தவர் காடுபுக் காரே.

குறிப்புரை :- அத்திப்பழம் - சுரோணிதம். அறைக்கீரை வித்து - சுக்கிலம். கொத்தி உலைப்பெய்து - கூடிக் குலாவிப் பெய்து. கூழட்டு வைத்தனர் - கற்போறபதி பண்ணி வைத்தனர். அத்திப்பழத்தை அறைக்கீரை வித்துண்ணலாவது, சுக்கில சுரோணிதக் கலப்பாம். கத்தி எடுத்தவர் - அழுது பிறந்தவர். குழந்தை பிறந்தவுடன் அழவேண்டும் என்க

சுக்கில சுரோணிதக் கலப்பால் உண்டானவர் மாண்டார் என்பதாம்.

161 மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளியே.

குறிப்புரை :- முகடு - உச்சி கூரை. வடிம்பு - குறடு. இவ்வுடம்புக்குக் கூரையும் குறடும் இல்லை என்க. காலும் இரண்டு - உடம்பிலுள்ள இருகால்களையும் குறித்தன. அலக்கு - வரிச்சு. ஊடு வரியாமையாவது, குறுக்கே கட்டாமை. இரண்டு கால்களும் வரிச்சும் உள்ளனவே தவிர அவை கட்டப்படவில்லை

என்க. அழியத்தக்கது என்பது பொருள். வேலையான்-பிரமன். வெள்ளித் தளி - சுக்கிலத்தாலான உடம்பு

சுக்கிலத்தாலான உடம்பு வினைக்கேற்பப் பிரமனால் படைக்கப்பட்டது என்பதாம்.

162 கூடம் கடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலயமும் அற்ற தறுதலும்
பாடுகின் றார்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே.

குறிப்புரை :- கூடம் - உடம்பு. கோலம் - அலங்கரித்தல். உயிர் நீங்கிய பின், உடம்பில் அழகு இல்லை என்க. ஆடும் இலயம் - உச்சுவாச நிச்சுவாசம் அற்றது அறுதல் – பிராணன் நீங்குதல் பிராணன் நீங்கியதும் மூச்சுக்காற்று இல்லை என்க. சிலர் - உற்றார் உறவினர். பண்ணில் அழுதல் - ஒப்பாரி. தேடிய தீ என்பதால் வீட்டிலிருந்து விறகு முதலியவை கொடுக்க மாட்டார்கள் என்பது தெரிகிறது.

மூச்சுப் போனதும் நெருப்பிலிட்டார்கள் என்பதாம்.

163 முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் கேடறி யீரே.

குறிப்புரை :- முட்டை என்பது, மீன் முட்டைபோல் கர்ப்பத்தில் பதியும் சரீரம் என்றபடி. முந்நூறுநாள் - பத்துமாதம். சிசு கர்ப்பத்தில் இருக்கும் காலம் பத்து மாதம் என்க. இட்டது தானிலை என்பது - விருப்பப்படி அமைந்ததல்ல என்றபடி. பார்மணம் பட்டது - உலக வாசனை உணர்ந்துகொண்டது. உலக வாசனை உண்டாகப் பன்னிரண்டாண்டு ஆகும் என்பதறிக. கெட்டது - மடிந்தது. கேடறியீர் - நிலையாமை அறிவீர்.

சரீரம் தோன்றிநின்று எழுபது ஆண்டில் மறையும் என்பதாம்.

164 இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே.

குறிப்புரை :- இடிஞ்சில் - அகலாகிய உடம்பு. எரி - உயிர். உடம்பிருக்க உயிரைக்கொண்டு சென்ருன் என்க. முடிவு - அழிவு. அழிவதை அறியாது அரற்றிக் கெடுகின்றனர் என்க. விடிஞ்சிருளாவது - பிறப்பு இறப்பு. படிஞ்சு கிடத்தல் - பற்றிக் கிடத்தல் என்க. நிலையற்ற உடம்பை நிலையென்று பற்றிக் கிடத்தல் என்க.

உடல் நிலையாமையை அறிந்தும் பிறப்பிறப்பில் உழல்கின்ருர்களே என்று இரங்கியவாறு.

165 மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
உடலும் உயிரும் உருவந் தொழாமல்
இடர்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்
குடர்பட வெந்தமர் கூப்பிடு மாறே.

குறிப்புரை :- மாயைக்கு ஆதாரமாகிய சிவன். உடலும் உயிரும் - உடம்பிலும் உயிரிலும் பொருந்தியுள்ள. உருவம் - செஞ்சோதி வடிவம். இடர் – துன்பம். உடம்பைப்படைத்த பெருமானை உடம்பினுள் கண்டு வணங்காமையால் துன்பம் உண்டாயிற்று என்க. குடர்பட - குடர்கிழிய. வெம்தமர் - விருப்பமான சுற்றத்தார். வெந்தமர் கூப்பிடுமாறு நரகிற் கிடப்பர் எனக் கூட்டுக.

செஞ்சோதியை வணங்காமையால் நரகவேதனைபடுவர் என்பதாம்.

166 குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்
டிடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதனர் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே.

குறிப்புரை ;- குடை - வெண்கொற்றக் குடை. குதிரை - குதிரைப்படை. கொற்றவாள் - செங்கோல். இவை மன்னர்க் குரியவை என்க. இடையும் - திரியும். புடையு மனிதனர் போகும் அப்போதே என்பது மக்கள் புடைசூழச் செல்லுங் காலத்திலேயே என்றபடி. இடம் வலம் அடையும் என்பது, பிராணன் இடம் வலமாகச் சுழன்று நீங்கும் என்றபடி.

முடிமன்னராய் நால்வகைச் சேனை புடைசூழச் சென்ருலும் பிராணன் நீங்குவதைத் தடுக்க முடியாது என்பதாம்.

[ தொடரும் ]

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்னுகரம்,

சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்

( மலர் 30, இதழ் 2, பக்கம் 96 இன் தொடர்ச்சி )

ஒவ்வொரு தீபங்களிலும் உபசார சாதனங்களிலும் அந்தந்த அதிதேவர்களைப் பூஜித்து எடுத்து அர்ப்பணம் செய்யவேண்டும். அதாவது தூபத்தில் அக்னிதேவனையும், தீபத்தில் சிவனையும், நாகதீபத்தில் கேதுவையும், விருஷப தீபத்தில் தருமதேவதையையும், ம்ருகதீபத்தில் விஷ்ணுவை யும், சூலதீபத்தில் காளியையும், கமடதீபத்தில ஹரியையும், கஜதீபத்தில் கணபதியையும், வியாக்ரதீபத்தில் துர்க்கையை யும், சிம்மதீபத்தில் தேவியையும், த்வஜதீபத்தில் வாயுவையும், மயூரதீபத்தில் ஸ்கந்தனையும், பூர்ணகும்பத்தில் சிவனையும், பஞ்சதட்டில் ஈசாளுதி பஞ்சப்பிரம்ம மந்திரங்களையும், நக்ஷத்ர தீபத்திற்கு 27 நக்ஷத்திர தேவதைகளையும், மேரு தீபத்திற்கு 12 ஆதித்யர்களையும் தியானித்துப் பூஜிக்கவேண்டும். இவ் வாறு, விபூதியில் சிவபெருமானைப் பூஜித்து ரக்ஷயளிக்க வேண்டும். கண்ணுடியில் சூரியனையும், குடையில் சந்திரனையும் சாமரத்தில் மஹாலக்ஷ்மியையும், வ்யஜனத்தில் பிரும்மதேவனை யும், கற்பூர ஹாரத்தியில் அக்னிதேவனையும் பூஜித்து இறை வனுக்கு உபசரிக்கவேண்டும்.

—வசனரத்னுவளி.

नागदीपं समारभ्य घटदीपावसानकम् ।
दीपानाराधनं कुर्यात् नमस्सर्पेति मन्त्रतः ॥

— कारणागमम्

நாகதீபம் முதலிய தீபங்களை அதற்குரிய வேதமந்திரங்க ளுடன் செய்யவேண்டும். அதாவது நாதருபத்திற்கு " நமோ அஸ்துஸர்பேப்யோ " என்று மந்திரம். இவ்வாறு எல்லா தீபத்திற்குமுள்ள மந்திரங்களால் தீபாராதனை செய்ய வேண்டும்.

भस्मानि दापयेच्छंभो दिग्बन्धं चास्त्र मन्त्रतः ।

— कारणागमम्

நல்ல பரிமளமான வெண்மையான விபூதியை மிருகி முத்திரை விரலால் எடுத்து மும்முறை சுற்றி எறிந்து திருஷ்டி கழிக்க வேண்டும். முதலில் விபூதி மடலிலிருக்கும் விபூதியை நிரீக்ஷணாதி ஸம்ஸ்காரம் செய்து எடுத்து, சிரசு, முகம், கண்டம், மார்பு, பாதம் முதலிய இடங்களில் இட்டு, அதன்பிறகு சுற்றி விட்டுத் தனது லலாடத்திலும் திலகமாகத்தரித்து கரசுத்தி செய்யவேண்டும்.

பூஜா பஞ்சகிருத்யம் :—

அபிஷேகம் - சிருஷ்டி, நைவேத்யம் - ஸ்திதி, பலி - சங்காரம், தீபம் - திரோபாவம், ஹோமம் - அனுக்ரஹமாம்.

नित्यं नैमित्तिकं चैव समकाले समाचरेत् ।
स्नाने स्नानं प्रकतव्यं नैवेद्ये च निवेदनम् ॥

हुतं वै होमकाले च बलिकाले बलिस्त्रमम् ।
धूपंदीपं च तत्काले ह्येवमेवं समाचरेत् ॥ — कासिकम्

நித்யம் நைமித்திகம் இரண்டையும் சேர்த்து ஒரேகாலத்தில் நித்திய அபிஷேகத்துடன் நைமித்திக அபிஷேகத்தையும் செய்யவேண்டும். இவ்வாறே நைவேத்யம், பலி, ஹோமம் முதலிய யாவற்றையும் செய்யவேண்டும்.

கிருஷ்ணாஷ்டமீ 'அமா' கிருஷ்ண சதுர்த்தசி, பௌர்ணிமா, ஸங்கிராந்தி, இந்த பஞ்சபர்வாக்களில் அபிஷேகம் முதலானவைகளைச் சேர்த்துச் செய்யவேண்டும், காமிகம்.

नैमित्तिकद्वयप्राप्ते महदादौ समाचरेत ।
लघ्वंते सदृशस्तच्चेत् कामचारोविधीयताम् ॥

இதிலும் இரண்டு நைமித்திகம் வருமாயின், பெரியதான நைமித்திகத்தை முதலில் செய்து பின் லகுவான நைமித்

திகத்தைச் செய்யவேண்டும். இரண்டும் சமமாகவிருக்குமே யானுல் தனது விருப்பம்போல் செய்யவேண்டியது. காமிகம்.

नैमित्तिकस्य कालोपि द्विविधः परिकीर्तितः ।
अल्पानल्प विभागेन स्वल्पस्यादयनादिकः ॥

ग्रहणादिर्महाकालः स्वल्पकालोऽग्रतो भवेत् ।
ग्रह्यमानेरवौ कुर्यान्मुच्यमाने निशाकरे ॥ — कामिकम्

ஸ்வல்பம் என்றும் மஹத் என்றும் நைமித்திகம் இரண்டுவிதம். அயனம் முதலானது ஸ்வல்ப்பம், கிரஹணம் மஹத் ஆகும். ஸ்வல்ப்பம் என்பதைமுன் செய்து விடலாம். க்ரஹணத்தை அந்தக் காலத்தில் செய்யவேண்டும். சூரியக்ரஹணம் பிடிக்கும் போது செய்ய வேண்டும். சந்திரக்கிரஹணம் விடும் போது செய்ய வேண்டும்.

भविष्यत्ययने दक्षे त्वतीते चोत्तरायणे ।
विषुवे मध्यकाले च स्नपनाद्यं समाचरेत् ॥ — कामिकम्

தக்ஷிணுயனம் பிறக்கும் முன்பும் உத்தராயணம் பிறந்தபின்பும் புண்யகாலம். இதுபோல் விஷுவில் மத்திய காலம் புண்ணிய காலம். அந்தந்தக் காலத்தில் அபிஷேகாதிகளைச் செய்ய வேண்டும்.

—காமிகாகமம்

த்வாரபூஜை கர்பாவரணபூஜை, போகசக்தி பூஜை முதலிய துடன் மூல லிங்க பூஜை செய்ய வேண்டும்

கர்ப்பக்கிரஹத்தில் சூக்ஷ்மமாய் உள்ள வாஸ்து பிரமன், விஞயகர், சப்தகுருக்கள், வாமை முதலிய நவ சக்திகள் பூஜிக்கப் படவேண்டும்.

அர்த்த மண்டபத்தில் போகசத்தியை பூஜிக்கவேண்டும். கர்ப்பக்கிரஹம் மூர்த்தாஸ்தானம் (தலை). அர்த்தமண்டபம், வக்த்ரம். (முகம்) இறைவனுடைய சத்திகள் மூன்று. பீடத்தில் ஞானசத்தி. அர்த்தமண்டபத்தில் போக சத்தி. வெளியில் வீர சத்தி.

அர்த்த மண்டபத்தில் போக சத்தியையும் அங்குள்ள ப்ரசன்னபடத்தில் ஸ்தாணு ருத்திரனையும் பூஜிக்கவேண்டும்.

போகசத்தி நின்று அல்லது உட்கார்ந்து கொண்டு இரண்டு புஜத்துடன் காக்ஷியளிப்பாள். வலது புஜத்தில் உத்பலமும், இடதுபுஜத்தைத் தொங்கவிட்டு இருப்பாள்.

ஒவ்வொருகால பூஜையின் முடிவில் மூலமந்திரத்தை 108 தடவை ஜபித்து அந்த மந்திரத்தை ஹ்ருதயத்தினுல் அபிமந்தரணம் செய்து கவசத்தினுல் அபிவேஷ்டணம் செய்து கட்கத்தினுல் ரக்ஷை கொடுத்து தர்ப்பம், புஷ்பம், அக்ஷதை இவைகளுடன் உத்பவ முத்திரையினுல் இறைவனுடைய வரத ஹஸ்தத்தில் கொடுக்கவேண்டும். இவ்வாறு இறைவனைப் பிரார்த்திக்கவேண்டும்.

गुह्यातिगुह्यगोप्तात्वं ग्रहाणास्मत्कृतं जपम् ।
सिद्धिर्भवतु मेयेन त्वत्प्रसादात् त्वयिस्थिते ॥
यत्किञ्चित्कर्महेदेव मया सुकृतदुष्कृतम् ।
तन्मे शिवपदस्थस्य भुंक्ष्व क्षपय शङ्कर ॥
शिवो दाता शिवो भोक्ता शिवस्सर्वमिदं जगत् ।
शिवोयजति सर्वत्र यश्शिवस्सोहमेवतु ॥
यावन्न तत्समो जातस्तावन्नाराधनेक्षमः ।

— कामिकम्

ஹே ரஹஸ்யத்திலும் ரஹஸ்யனே. எல்லோருக்கும் நீ ரக்ஷகன். என்னுல் செய்யப்பட்ட ஜபத்தை ஏற்றுக்கொள். தாங்கள் ரக்ஷகத்தேவனுக இருக்கையில் எந்த ஜபத்தினுல் சித்தியானது உண்டாகுமோ உன்னுடைய அனுக்கிரஹத்தினுல் (அதைக் கொடு). சுக்ருதமோ, துஷ்க்ருதமோ யாதொரு கர்மாவானது என்னுல் செய்யப்படுகிறதோ. ஹே தேவனே! சிவபதத்தில் இருக்கிறவனுன என்னுடைய அந்தக் கர்மாவை அனுபவி. பொறுத்துக்கொள். சிவனே கொடுப்பவன். சிவனே அனுபவிப்பவன். எல்லாம் சிவன். சிவனே எங்கும் பூஜிக்கிருன். அப்படி உள்ள சிவன் யாரோ. அவனே நான் என்று விக்ஞாபனம் செய்யவேண்டும். எதுவரையில் சிவனுக்குச் சமமானவனுக ஆகவில்லையோ அதுவரையில் ஆராதனம் செய்யத் தகுதியில்லாதவன். (தொடரும்)

# " கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான் "

வித்துவான். திருமதி. ப. நீலா

( மலர் 30 ) இதழ் 2, பக்கம் 74 இன் தொடர்ச்சி )

## 38. உலவாக் கோட்டை அருளியது

மின்பனிக் கதிர்வேணி வானவன் மீனவனைக் காக்கச் சோழனை மடுவுள் வீழ்த்தியவாறு கண்ட நாம் இனி அன்ப னொருவனுக்காக உலவாக்கோட்டை அருளிய பாங்கைக் காண விருக்கிறோம்.

பொடியணிந்த புனித மேனியும், ஏற்றுக் கொடியும் உடைய பெருமான் வேதக்குடுமிக் கிணையான கூடலம்பதியில் கோயில் கொண்டிருக்கிறான். அக்கூடல் நகருள் அடியார்க்கு நல்லானென்ற வேளாளன் ஒருவன் அறத்திற்கும் புகழிற்குங் கூட நல்லவனாகி விளங்கி வருகின்றான். அவனுடைய அறத் திற்கு அருள்துணையாகி வருபவள் அவன்மனைவி தருமசீலை. ஏனைய பெண்கள் பாராட்டும் பண்பும், கொண்டவனின் உயர்கதிக்குத் துணையாம் பான்மையும் அமையப்பெற்ற உத்தமி யாகி விளங்குகிறாள் அவள்.

பலவாகிய ஏர்களைக் கொண்டு பூமியை விளைத்து வரும் பயனைக் கொண்டு வில்லேருழவனும் அரசனுக்குரிய கடமைப் பொருளை அளந்துவிட்டு எஞ்சியவற்றை அல்லேறு கண்டன் அடியார்க்கு அமுதாக்கி நல்லறம் செய்கிறான் தன் மனைவியுடன் அடியார்க்கு நல்லான். நிறைந்த அளவில் அடியார் பலரும் வந்து வகைமாண்ட அறுசுவை யுணவைப் பெற்றுப் பயன் பெறுவதால் வேளாளன்பால் மணற்கேணி யில் நீர் ஊறுவதுபோல செல்வம் பல்கிப் பெருகிற்று.

பன்னாட்கள் சென்றபின் கண்ணுதற் பெருமான் 'இவனது செல்வவளம் குன்றினாலும் வருவோர்க்கு இல்லை

யென்னும் இளிவரவு இவனிடம் உண்டாகாது' என்பதைத் தெரிவிக்க நன்னீர் வயலின் விளைவைக் குறைத்தார், வளமும் சுருங்கியது-

கடன் வாங்கியும், வட்டிக்கு வட்டி கட்டியும் அன்பர் பூசை முட்டாமல் செய்துவரும் அடியார்க்கு நல்லான் பலநாள் தன் மனைவியுடன் பட்டினிகிடந்தும் வருந்தினான். 'வளத்தினைக் கொடுக்கும் வள்ளலே உளத்தினில் இரக்கம் கொள்ள வில்லையானால் நொந்துதான் என்ன பயன்' - என்று தளர்ந்து அடியார் பணிக்கு இடையூறு வந்ததே என்று மனைவியுடன் செய்வதறியாது திகைத்தான்! அடியார்களை உண்பிக்காமல் தானும் உண்ணுவதில்லை யென்ற விரதத்தால் பசித்தீ பொசுக்க நனிவாடினான்.

இறக்கும் இவ்வுடம்பால் இனிப் பெறும்பேறு ஒன்றும் இல்லை - என்று தருமத்தின் குன்றையொத்த அடியார்க்கு நல்லான் தன் மனைவியோடும் கூடற்பெருமானின் கோயிலடைந்து இதனை அவற்குத் தெரியப்படுத்தி ஆவிதுறப்போம் என்று சென்றடைந்தான். ஐயன் திருமுன்னடைந்து அடி தாழ்ந்து 'வானோர் உய்ய நஞ்சமுண்ட வள்ளலே'! உனதடியார் பூசைக்கு உதவாமல் என் வயல்கள் பாழ்பட்டன. கடன் தருவாருமில்லை; ஆகவே எனக்கு இவ்வறப்பணிக்குக் கடன் தருவாரைக் காட்டியருளுக; இல்லையேல் கற்புக் குரியாள் இவளோடும் என் உடற்பொறையை மாற்றுவேன் - என்றுருகி வேண்டினான்.

வேதப்பொருள் சொன்ன விமலன் அசரீரியாக அஞ்சாதே! வேளாண் தலைவனே! உன்னகத்தில் இன்றே அள்ள அள்ளக் குறையாத செந்நெல்லாலாகிய அரிசிக்கோட்டையை அருளுகின்றோம். நீ ஒவ்வொருநாளும் அதனைப் பூசித்து வேண்டிய அரிசி கொண்டு உன் பணியைவிடாது செய்க. அதன்பின் உனக்கு வீடளித்து உன்னை ஆட்கொள்வோம் என்று அருள்மொழி பகன்றார்.

அதனைக்கேட்டு மட்டிலடங்கா மகிழ்வுகொண்டு மனையடைந்து பண்டைய தவவினையின் பயனை ஒருங்கடைந்தவன் போலக் குறையாத அரிசிக் கோட்டையைக் கண்டான்.

வானுறு சூடியின் அருளால் இன்னடியார் பலருக்கும் வேதச் செல்வர்களுக்கும், தென்புலத்தோர்க்கும், தெய்வம், விருந்து, ஒக்கல் என்ற ஐம்புலத்தவர்களுக்கும் வரையாது உபசாரம் செய்தான். பலநாட்களுக்குப் பின் அடியார்க்கு நல்லான் தன்மனைவி தருமசீலையுடன் இமவான் மகளைப் பிரியாத இன்பன் அமரும் சிவலோகத்தில் இடம்பெற்று மகிழ்ந்தான்

## 39. மாமனாக வந்து வழக்குரைத்தது

அடியார்களுக்கெல்லாம் அன்போடு அமுதிட்ட நல்லவன் பொருட்டு உலவாக்கோட்டையருளிய இறைவன் வணிகச் சிறுவனொருவனின் மாமனாக வந்து வழக்குரைத்த வரலாறு காண்போம்.

கூடல்மாநகரின் வணிகர்களுக்கெல்லாம் தலைமை உடையவனும் தனபதியென்னும் பேராளன் தன்மனைவி சுசீலை யென்பவளுடன் இனிய இல்லறம் நடத்திவந்தான். மாட்சிமிக்க மனையறம் புதல்வரால் சிறக்க வேண்டுமே! தனபதிக்கு அப்பேறு வாய்க்கவே இல்லை. தன் தங்கையின் மகனைத் தன்மகனாக விதிப்படி ஏற்றான். அவன் மனையாளும் அம்மகவினைத் தொழுது வாங்கிப் புனைவன புனைந்து போற்றி வளர்க்கின்றாள்.

காலம்செல்ல, தனபதி தன்மனைவிமேல் வைத்த காதல் மிகுதியால் தங்கையை வெறுக்கத் தொடங்கினான். வருந்திப்பெற்ற மகனைத் தனக்குத் தந்துதவிய செயலையும் மறந்து அவள்மேல் பகைபாராட்டத் தொடங்கினான். பகை பொறாத தங்கை ஒருநாள் சினந்து 'பிள்ளைப் பேறற்ற பாவியே! என் மகனாலன்றோ உனக்கு இருமை இன்பங்களும் கிடைக்கின்றன' - என்று தருக்கிச் சொன்னாள்; நாணத்தினால் தலைகுனிந்த தனபதி இனி அடுத்த பிறவியிலாயினும் மகப்பேறருள்க என்று இறைவனைவேண்டித் தவம் புரிய மனையாளோடும் காட்டிற்குச் சென்றான்.

தனது எல்லையற்ற செல்வத்தையெல்லாம் மருமகனுக்காக்கிவிட்டுக் காட்டிற்குச் சென்ற தனபதி திரும்பி வராமையினால் தாயத்தார்கள் வலிய வழக்கிட்டு அப்பொருள்களையெல்லாம் கைப்பற்றிவிட்டனர்.

**திக்கற்றோருக்குத் துணை தெய்வமே:**

விளைநிலம், அடிமை, ஆபரணங்கள், பசு முதலிய பிற பொருள்கள் யாவற்றையும் தாயத்தார் கவர, செய்வதறியாது மகனும் தாயும் உண்மை உணர்ந்த உமைநாதனின் திருவடிகளையே பற்றுக்கோடாய்க் கொண்டனர். கூடல் நாயகனின் கோயிலை நண்ணி, தந்தையும் தாயுமாகும் தனிமுதலே! சார்பிலார் தமக்கோர் சார்பாயிருக்கும் கண்ணுதற் கடவுளே! என் மகனுக்கு அவன் மாமன் உவந்தளித்த செல்வத்தைத் தாயத்தார் வஞ்சனையால் பற்றிக்கொண்டார். நானொருத்தியே தளபதியின் தங்கை, எனக்கும் இவன் ஒருவனே மகன், எங்களுக்கு ஆதரவுதர வேறுயாருமில்லை.

எல்லா மறிந்த பரம்பொருளே! எங்களுக்கு உய்வகை காட்டுக என்றுகூறி அழுது கோயிலிலேயே சிறிதுபொழுது களைப்பினால் கண்ணயர்ந்துவிட்டாள். அவள் கனவில் செஞ்சடை வேதியனாக வந்த இறைவன் ''பெண்ணே - புலர்ந்த பின் உனது தாயத்தார்களை தென்னவனுணை என்றுகூறி அறச்சபைக்கு அழைத்து வா - நாமே வந்து அறிவால்மூத்த அவையோரிடம் அவ்வஞ்சக வழக்கினை வெளிப்படுத்துவோம்'' - என்று அருளிச்செய்தார்.

விழித்தமாது திகைத்து இறையருளாணையை வியந்து அதன்படியே சிறுவனுடன் தாயத்தார் மனைதொறும் சென்று தென்னவனுணையைத் தெரியப்படுத்தினாள்.

அட்டில்வாய் நெருப்பிடேல் ஓரடியிடேல்
    அறத்தா றன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று போகொட்டேன்
    பலருங் கேட்க
இட்டனன் அரசனுணை அறத்தவி
    சேறி யான்றோர்
ஒட்டிய படிகேட் டெங்கள் உரிப்பொருள்
    தந்து போமின்

'அடுப்பில் நெருப்பு இடக்கூடாது. ஓரடியும் இனி எடுத்து வைக்கக்கூடாது. வஞ்சகத்தால் கொண்ட எங்கள் உரிமைப்

பொருளைப் மீட்டும் எங்களுக்கே தர உங்களைப் பாண்டியனின் ஆணையால் அழைக்கின்றேன் - வாருங்கள் அறச்சபைக்கு' என்றழைத்த பெண்ணைப் பலர் கோபத்தால் புடைத்துப் புழுதியில் தள்ளினார்கள். ஆனால் அரசனாணை என்றதால் அனைவரும் வந்து அறச்சபையில் கூடினர்.

தனபதியின் தங்கை இதுமுறையோ - இது தகுமோ என் பொருளை இவர்கள் பழிபடக் கவர்ந்ததுமல்லாமல் என்னை அடித்தும் துன்புறுத்தினார்கள் - தெய்வமே; நீயே வந்து இங்கு நீதியைக் காட்டிச்செல் என்று முறையிட்டாள் அங்கயற்கண்ணிபாகன் அங்கே தனபதியாய்த் தோன்றினான்.

**நீதிகேட்க வந்தான் நிலாமுடியன் :**

அரசனிங்கு இல்லையோ; ஆன்றவருமில்லையோ; வேந்தனின் செங்கோலும் கோடியதோ; நூல்களால் போற்றப் பெறுந் தெய்வமும் இந்நகரில் இல்லையோ; தருமமும் ஒளித்துக்கொண்டதோ என்று நெடுங்கைகளை வீசிக் கேட்டுக் கொண்டே நீதிமன்றத்துள் நுழைந்தார். தனபதியின் வரவைக்கண்ட தாயத்தார்கள் அதிசயத்தோடு அச்சமுங் கொண்டார்கள்.

மாமனாகி வந்தவன் நேரே தன் மருமகனிடம் போய் அவனைத்தழுவி மோந்து, தங்கையையும் தழுவிக்கொண்டு சாமவேதம் ஒலிப்பதுபோல் வாய்விட்டு நீர் ஆதரவற்றவர்களான தென்னே! ஐயகோ - என்று அழுதுனைந்தார். குடங்கையொத்த நெடுங்கண்ணாள் தன்மகனுடன் அவரடியில் விழ அவளுக்கும் ஆறுதல் கூறினார். என்மகனின் மார்பிலசைந்த அணியை, ஐம்படைத் தாலியை, முகத்திலசைந்த சுட்டியைக் கவர்ந்தவர்களா இவர்கள்! பிள்ளையின் அணிகள் என்னபெறும் என்று கவர்ந்தார்களோ ? உண்மையாக நான் சேர்த்த இப்பொருள்களைக் கைப்பற்றிய இவர்களது வஞ்சனை இப்போதே வெளிப்படும் பாருங்கள் - என்று அவையத்தாரைப் பார்த்துப் பின்னுங் கூறுவார்.

நான் நட்பிடை வஞ்சம் செய்தோ - வட்டிக்கு வட்டி வாங்கியோ - வைத்த பொருளை வஞ்சனை செய்தோ இச் செல்வத்தைச் சேர்க்கவில்லை. எம்மையாளும் மதுரைச்

சொக்கனே ! முன்பு மாணிக்கம் விற்ற எம்குல வணிகரே ! நீரே இவ்விடம் வந்து நீதி கேளும் - என்று முறையிட்டார். அவையோர்களே ! அரசநீதி கோடாமல் தருமம் பிழையாமல் நாவெனும் துலையிலிட்டு நன்மையைச் சொல்லுங்கள் என்று தனபதி எடுத்துரைக்க - சபையோரும் தனபதியின் வழக்கே உண்மை என்று தீர்ப்பளித்தனர்.

ஆசை அறிவை மயக்கத் தாயத்தினர் பின்னும் ஓர் உத்திசெய்து வெல்வோம் என்று இவர் உண்மையான தனபதி இல்லை - என ஒருசேரக் கூக்குரலிட்டனர். இதனைக்கேட்ட வுடன் வந்தவர் தம்குல முன்னோர்களின் பெயரை, குலத் தொழிலைப் பெருமையைப் பிறழாமல் கூறி அவர்களில் மைந்தர் - மனைவியர் - மாமன் - மாமி தாயமென்ற அத்துணைப் பேரையும் தவறின்றிக் கூறினர்.

கூடியிருந்த ஆன்றவர் அனைவரும் ‘எள்ளளவும் ஐய மில்லை - இவரே தனபதி. உங்கள் பொய்வழக்குத் தோற்றது. பொருளையெல்லாம் இச்சிறுவன் வசம் ஒப்புவிக்க’ என்று உத்தரவிட்டனர்.

தாயத்தினர் இப்பொய்வழக்குப் பாண்டியன் செவிக் கெட்டுமானல் அவனும் தம்மைத் தண்டிப்பான் என்று பயந்து வீட்டிற்குப் போய் வருவோமென்றும், குளத்திற்குச் சென்று வருவோமென்றும் பலபடக்கூறி விரைந்து அவ்விடம் விட்ட கன்றனர்கள்.

வல்லெழுவனைய தோளாரனைவரும் வன்கால் தள்ளச், செல்லெழு முகில்போல் உடைந்தனர். பின்பு வணிகன் தன் மருமகனுக்கே அச்செல்வமெல்லாம் உரியது என்பதை எழுதி வாங்கினன். அவையோரும் தங்கையும் மருமகனுங்காண அவ்விடத்திலிருந்து உடன்மறைந்தான் - தனபதியாக வந்த தனிமுதல்வன். செய்தி வேந்தனின் செவிக்கெட்டியது. இப்படி வணிகனய்வந்து வழக்காடியவன் மதுரையின் இறை வனே என்பதை மக்களும் மன்னவனும் உணர்ந்தனர்.

நன்றி மேலிட சுந்தரேசபாத சேகர பாண்டியன் வணிகச் சிறுவனுக்குச் சிறப்புப் பல செய்தான். பெருமானின் திருக் கோயிலைப் பொன்னினுல் புதுக்கி அழகுபடுத்தினுன்.

பலகாலஞ் சென்றபின் அரசபாரத்தைத் தன் மைந்தன் வரகுண பாண்டியனின் தோள்களில் மாற்றிவிட்டு உம்பர் நாதனின் திருவடிகளில் கலந்து மகிழ்ந்தான்.

(பின்குறிப்பு) சுந்தரேச பாதசேகரனின் ஆட்சிக் காலத்தில் சோழனை மடுவில் வீட்டியதுமுதல் இவ்விரு திருவிளையாடல்களும் நிகழ்ந்தன என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

(வளரும்)

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkazhi

" The temple is very impressive very well maintained and the people friendly. I am amazed at the size. It has been helpful in giving me a little more understanding of the religion of the people.

Sd Thomas J. Laliberte,
13—1—71 Sd. Daniel Berkowitz.
(American Peace Corps Volunteers.)

" I am deeply imressed with the cleanliness and maintenance of this temple. It is really a pleasant experience to worship the deities in this temple."

Sd M. Jayaraman,
17—1—71 Appellate Controller of Estate Duty.
Madras-34.



# அப்பர் தேவாரத்தில் விநாயகர்

புலவர். திரு. இரா. செல்வக்கணபதி

## கல்லார்கட் பட்ட திரு :

செறிந்து வளர்ந்து நின்றது அந்தக்காடு. கதிரவனின் ஒளி வெள்ளம் அதன் ஊடே புகமுயன்று தளர்ச்சியுற்றது. அமைதிகொண்ட அக்காட்டிடையே கடுந்தவம் இயற்றி நிற்கின்றுள் ஓர் இளம் பெண். அவள் ஓர் அரக்கர்குலக் கொழுந்து. வசிட்டர் மரபில் வந்தவர் மாகத முனிவர். அவர்பால் அருள் பெற விரும்புகிருள் விபுதை என்ற பெயர்கொண்ட அந்நங்கை. தவமேற்கொண்ட முனிவர் ஒருநாள் கண்விழிக்கிருர். அவர் பார்வையில் காதல் மடப்பிடியொன்று களிற்ரெடு மருவி நிற்கும் காட்சி படுகிறது. முனிவர் காமக் குறிப்பில் ஆழ்கிருர். அவர் குறிப்புணர்கிருள் விபுதை. முனிவர் அருகில் நெருங்குகிருள்; காமவயப்பட்ட முனிவர் விபுதையைப் பெண் யானையாக்கித் தானேர் ஆண் யானை வடிவால் அவளோடு கூடிக் கலக்கிருர். இக்கூட்டக் கலப்பில் யானை முகத்துடன் கயாசுரன் தோன்றி, சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் இயற்றுகிருன். பெருமான் அருளால் பெருவரம் பெற்று மதங்கபுரத்தில் அரசாள்கிருன் கயாசுரன். 'கல்லார் கட் பட்ட திரு' வென்ன அவன் தவங்கள் தேவர்களை வருத்தப் பயன்படுகிறது.

## கணபதி தோற்றம் :

தேவர்கள் சிவபெருமானைப் பரவுகின்றனர். பெருமான், உமையைப் 'பிடியதன் உரு' கொளச் செய்கிருர். 'கரியது வடிவு' தான் கொள்கிருர். இக்கூட்டக் கலப்பில், 'வழிபடும் அவர் இடர்கடி கணபதி' தோன்றுகின்ருர். தோன்றி தன் கொம்பினை ஏவி கயாசுரனை அழிக்கிருர். தேவர்கள் மகிழ்கின்றனர். கயாசுரன் பெருச்சாளி வாகனமாய் விநாயகரைத் தாங்குகிருன்.

இது கந்தபுராணம் விரிக்கும் கதை. இந்த விரிந்தகதைக்கு அடியிட்டவர் அப்பர் பெருமான். விநாயகக் கடவுள் தோற்றத்திற்கு அவர் கூறும் காரணம் இப்படி அமைகிறது. அடியார்களும், மறைவல்லாரும் எதிர்கொள்ளத் திருவீழிமிழலை எய்திய

ஆளுடைய அரசர் திருவீழிமிழலையானைப் பணிந்து, பணிந்து பாடுகிறார். "போலும் – போலும்" என முடிவடையும் தொடர்களால் இறைவன் இயல்பை எடுத்தோதி வியக்கும் அரசர் விநாயகன் தோற்றத்தை விளங்க வரைகிறார்.

"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை அவனாற்கொல் வித்தார் போலும்"

என்றெடுத்து, தேவர் குலம் வாழ, அரக்கர் திறம் மாள வந்த விநாயகர் தோற்றத்தை விளைத்த பெருமானை வியந்து சிறக்கிறார்.

முதற் குறிப்பு :

விநாயகர் வழிபாடு தமிழர்க்குத் தொன்மையானது. தமிழ் மண்ணில் அவ்வழிபாடு வந்த வகை பற்றிய கருத்து வேற்றுமைகள் எத்தனையோ உண்டு. சங்க இலக்கியம் எனப் பேசப் பெறும் தொகையும் பாட்டும் விநாயகர் வழிபாட்டை விளக்க வில்லை. முருகனும் – உருத்திரனும், பலராமனும் – திருமாலும் அங்கே திகழ்ந்து நிற்கிறார்கள். விநாயகர் விளங்கித் தோன்ற வில்லை. சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்ட கீழ்க்கணக்கு நூல்களுள் தொன்மையானவற்றுள்ளுஞ்சரி, சில காப்பியங்களுள்ளும் சரி விநாயகரைக் காணோம். கல்லாடத்தில் விநாயகர் குறிப்பு உண்டு. தற்கால ஆய்வால் கல்லாடம் தேவாரத்திற்குக் காலத்தால் பிற்பட்டது என நிறுவப்பட்டது. இக்கருத்து உண்மையானால் விநாயகரைப்பற்றிய முதற் குறிப்புக்களைத் தருவன மூவர் தேவாரங்களே என்பது வலிமைபெறும்.

மூவர் நெறி :

மூவர் தேவாரத்துள்ளும் விநாயகர் பற்றிய குறியீடுகள் மிகச்சிலவே. திருஞானசம்பந்தப்பிள்ளையார் இரண்டிடங்களிலும், சுந்தரமூர்த்திகள் ஓர் இடத்திலும் விநாயகரைப்பற்றிக் குறித்தருளினர். சம்பந்தர் தேவாரம் விநாயகர் வந்த வரலாறு கூறி, அவர் தோற்றம் விளக்குகிறது. சுந்தரர் தேவாரமும் இவரைப்பேசுகிறது. அப்பரடிகள் மட்டுமே விநாயகர் பற்றிய பல குறிப்புக்களை ஆங்காங்கே விளக்கிச்செல்கிறார். ஐந்து திருப் பாடல்களுள் அவர் ஐங்கரனின் திறம் பேசுகிறார். அவற்றுள்ளும் நான்கு திருப்பாடல்கள் தாண்டகத்துள் அமைகின்றன.

கண்ணுதற் பெருமானையன்றிச் சிறு தெய்வம் எவற்றையும் பாடுதல் செய்யா மதுகையுடையவர்கள் தேவார மூவர். அப்பர்

அடிகள் தேவாரத்துள் விநாயகர் பற்றிய குறிப்புக்கள் யாவும் சிவபெருமானின் பேரருளை வியக்கும் முகத்தான் அமைந்தனவே யன்றி விநாயகருக்குரிய தோத்திரங்கள் எவையுமில்லை. பிற தெய்வங்கள் பற்றிய குறிப்புகளும் இந்த அடிப்படையில் மட்டுமே அமையக் காண்கிறோம். உமையம்மையார்க்குக்கூடத் தனியே வாழ்த்துரைக்காத வன்மையினைத் தேவார மூவரிடம் காண முடிகிறது.

## அடிகள் காட்டும் ஐங்கரன் :

ஐந்துகரத்தினனுய அப்பெருமானுக்கு அப்பரடிகள்வழங்கும் பெயர்கள் பல. கணபதி, விநாயகன், விக்கினவிநாயகன், கைவேழமுகத்தவன், தண்கடமாமுகத்தினன் என ஐந்து திரு நாமங்களைக் குறிப்பித்தருளுகிறுர். இவற்றுள் 'கணபதி' என்ற திருநாமம் மட்டும் ஏனை இரு தேவார ஆசிரியர்களாலும் அங் ஙனமே எடுத்தாளப்பெறக் காண்கிறோம். அப்பரடிகள் இங் ஙனம் பல திருநாமங்களைச் சூட்டுவதோடுமட்டும் அமையாது, விநாயகரது தோற்றம், அருள்தன்மை போன்ற சில குறிப்புக் களையும் இணைத்துப் பேசிச் செல்கிறுர்.

## கணபதி என்னும் களிறு :

அமணர்கள் வஞ்சனையுணரமாட்டாத பல்லவ வேந்தன் சைவம் மீண்ட அப்பர் பெருமானுக்கு இழைத்த தீமைகள் எண்ணில. பல்லவன் ஏவலில்தன்னை இடற ஏவப்பற்றபெட்டத்து யானைக்கு அஞ்சாத திண்மையராய் அப்பரடிகள் அருளிய பதிகம் 'சுண்ணவெண் சந்தனச்சாந்தும்' என்றுதொடங்கும் அற்புதப் பதிகமாகும். இப்பதிகத்தேதான் விநாயகரைப்பற்றிய முதற் குறிப்பினை அப்பரடிகள் அருள்கிறுர். கடகளிற்றினையும் கண் டஞ்சா உள்ள உறுதிக் காரணங்களைக் காட்டி வரும் அடிகள் விநாயகனின் விளக்கத்தைக் குறிக்கிறுர். கணபதி என்னும் களிற்றையும், இருசுடரையும், கயிலாய மலையையும், கெடிலத்தை யும் உடைய வீரட்டானத்துப் பெருமானின் தமர்யாம் என்ற பெருமித உணர்வைப் பேசிச் சிறக்கிறுர். கணபதி என்னும் களிற்றையுடைய பெருமான் என, சிவபெருமானைக் குறிப்பித் தருளுதலாலே அப்பரடிகள் ஓர் சிறப்பினை உணர்த்த விரும்பி யிருத்தல் திண்ணமாகிறது. கணபதி என்னும் களிறு என்று மட்டும் குறியாது,

"பலபல காமத்த ராகிப் பதைத்தெழுவார் மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியும் கணபதி யென்னும் களிறு"

என அக்களிற்றின் இயல்பினையும் உடன் விளக்கிப் பேசுகிறார். இக்கருத்தினையே, 'தனதடி வழிபடு மவரிடர் கடி கணபதி' என ஞானப்பிள்ளையார் குறிப்பிக்கக்காண்கிறோம். வேண்டுவோர்க்கு வேண்டுவனவற்றை எல்லாம் ஒன்றோடு ஒன்று கலந்து, பெற்ற முறையன்றிப் பிறழ்ந்து பயன்தரும் பேரருளாளனாக விநாயகரை குறித்தருளும் சிறப்பு அப்பரடிகளின் அப்போதைய மனநிலையை மதிப்பிட உதவுதலைக்காண்கிறோம். தடைகளைத் தகர்த்து அருள் பாலிக்கும் விநாயகரையும் உடைய திருவதிகைவீரட்டத்து இறைவனின் தமர்யாம் என்ற குறிப்பில் விநாயகனது அருளிப் பாட்டையும் சிவபெருமானை வணங்குதல் ஒன்றாலேயே பெறுதல் கூடுமென எண்ணும் அப்பரடிகளின்கருத்து விளங்கித் தோன்றக் காண்கிறோம். அத்தொடரால் 'கணபதி' என அவ்விறைவன் திருநாமமும் 'களிறு' என வடிவமும் குறிப்பிக்கப்பெறும் சிறப்பையும் அறியமுடிகிறது.

## வரலாற்றுப்போக்கில் :

இங்கே குறிப்பிடப்பெற்ற விநாயகர் பற்றிய குறிப்பைப் பற்றி வேறொன்றையும் எண்ணிப்பார்த்தல் வேண்டத்தக்கதாகும். அப்பரடிகள் சமணம் விட்டு சைவத்துக்கு மாறியவுடன், பல்லவமன்னன் இழைத்த தீமைகள் பலவற்றுள் யானையை ஏவியதும் ஒன்று. அக்காலை எழுந்த திருப்பதிகமே 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்ற திருப்பதிகம் என்பது பெரிய புராணத்தால் நன்கு விளக்கமுறுதல் கண்கூடு. எனவே, அப்பரடிகள் சைவம் சார்ந்த ஆரம்ப காலத்தில் அருளப் பெற்றது இத்திருப்பதிகம் என்பது உறுதியாகிறது. இத்திருப் பதிகத்துள் விநாயகர் பற்றிய குறிப்பிருத்தலை மேலே கண்டோம்.

பெரியபுராணத் துணைகொண்டும், பிறசான்றுகளாலும் நுண்ணிதின் ஆராய்ந்த தற்கால வரலாற்றாசிரியர்கள் பலரும் அப்பரடிகள் சமணம் விட்டு சைவம் சார்ந்தது கி. பி. 630க்கு ஒன்றிரண்டாண்டு முன் பின்னாதல் வேண்டுமென வரையறுக்கின்றனர். எனின், திருஞானசம்பந்தர் திருவவதாரஞ் செய்த காலமோ கி. பி. 638 ஆம் ஆண்டை ஒட்டியதாதல் வரலாற்றாராய்ச்சியால் உறுதிப்படுகிறது. இவ்விரு முடிவும் உறுதி செய்யப்படுமானால் திருஞானசம்பந்தரின் "பிடியதன் உரு" என்று தொடங்கும் விநாயகர் பற்றிய குறிப்பினைத்தரும் தேவாரம் எழுந்ததற்கு ஏறத்தாழ பதினைந்தாண்டுகட்கு முன்னரே அப்பரடிகளின் 'சுண்ண வெண் சந்தனச் சாந்தும்,

என்று தொடங்கும் விநாயகர் பற்றிய குறிப்புடைய பதிகம் எழுந்ததாதல் உறுதிப்படும். எனவே, விநாயகரைப்பற்றிய முதற்குறிப்பினைக் குறிப்பித்தருளிய பெருமை அப்பரடிகட்கே உரியதாதல் பெறப்படும். தொகுப்பு முறையால் இத்திருப் பதிகம் நான்காம் திருமுறையதாயினும், கால ஆய்வால் தமிழிலக்கியத்தினுள்ளேயே விநாயகர் பற்றிய முதற்குறிப் பினைத் தருவதான பெருமையைப் பெறுகிறது. நாலாந்திரு முறையுள் இத்திருப்பாட்டு ஒன்றே விநாயகர் குறிப்புடையது.

**ஒரு சிற்றாராய்ச்சி :**

ஐந்தாம் திருமுறையில் விநாயகர் பற்றிய குறிப்புக்கள் ஏது மில்லை. எனினும், சிலர் திருப்பேரெயில் குறுந்தொகையுள் அமைந்துள்ள

" முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யாரெனின் தானோர் தலைமகன்
என்னை யாளு மிறையவ னெம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளரே "

என்ற திருப்பாடலை எடுத்துக்காட்டி, இதன் கண் வரும் முன்னையார், என்ற சொல் விநாயகரைக் குறிப்பித்த தென் கின்றனர். இரண்டாவதுவரியில் 'தம்' எனப்பன்மை பேசாது 'தன்' என ஒருமை பேசியமை கொண்டே அங்கு முருகனைப் பற்றிய குறிப்பு மட்டுமே யுண்டு என்பது பெறப்படும். மேலும் 'முன்னையார்' என்பது நான்காம் வரியில் உள்ள 'பின்னையார்' என்பதினொடு கருத்து வகையால் இணைந்து, பேரெயில் இறை வன் 'முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாக வும், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றிய'னாகவும் திகழும் பெருமான் எனவே சுட்டி நின்றது எனக்கொள்வதே ஏற்புடைக் கருத்தாகும். இங்ஙனம் இயைத்தலே இணக்கமா வதை நுண்ணிதின் உணர்தல் கூடும்.

**விக்கின விநாயகர் :**

இனி, ஆறுந்திருமுறையில் அப்பரடிகள் திருப்புறம்பய இறைவனைப் போற்றிசைக்கும் அடியார் கூட்டத்துள் ஒருவராக விநாயகரை 'விக்கினவிநாயகன்' எனப் பொதுப்படக் குறித்த மையான், தம்மை வழிபடுவார்க்கு இடையூற்றைப் போக்குத லும், வழிபடாதார்க்கு இடையூற்றையாக்குதலும் உடையன்

என்ற கருத்துப் பெறப்படுதலை அறிய முடிகிறது. பிற்காலத்து எழுந்த விநாயகர் பற்றிய கதைகள் பலவும் இவ்விருவகைப் பொருளையும் விளக்க முயல்வதை அறிய முடிகிறது.

### வேழ முகத்தவன் :

திருவிழிமிழலைத் திருத்தாண்டகத்துள் கைவேழமுகத்தவன், துதிக்கையொடு கூடிய திருமுகத்தினன் என விநாயகர் வடிவுரைத்த செய்தியையும், கயமுகாசுரனை, விநாயகரைப் படைத்து அழிப்பித்த செய்தியையும் முன்னரே விளங்கக் கண்டோம்.

இனித் திருவேகம்பத் தாண்டகத்துள் ' தண்கடமா முகத்தினார்க்குத் தாதை காண்'' எனக்குறிப்பித்துச் செல்லும் அப்பரடிகள் மதநீரொழுகும் விநாயகர் திருமுகச் செவ்வியுரைத்து, அவர் சிவபெருமான் மகனார் என்ற கருத்தை நினைப்பித்துச் செல்வதைக் காணமுடிகிறது.

### எங்கும் விநாயகர் :

இறுதியாக வாய்மூரடிகளைத் தாம்கண்ட அனுபவம் உரைக்க வந்த அடிகள் 'மெல்லியலும் விநாயகனும் தோன்றக்கண்டேன்' என உமையோடு விநாயகரின் ஒருங்கிணைந்த காட்சியைச் சுட்டி உமைமைந்தனாக அவரை உணர்த்துகின்றார். இங்ஙனமாக விநாயகர் பற்றிய பல்வேறு குறிப்புக்களை அப்பர் தேவாரத்தில் காண முடிகிறது. இத்தகு கருத்துக்களை ஒன்று படுத்தி நோக்குதல் பல சமய உண்மைகளை நெறிநின்று காணுதற்குப் பயன்படுதல் கூடும். விநாயகர் பற்றிய அடிப்படைக் குறிப்புக்களை அப்பரடிகள் முதன் முதல் வழங்க, இன்றோ விநாயகர் பற்றிய குறிப்பில்லாத சைவ-சமய இலக்கியங்களே இல்லை என்ற நிலைமைக்கு வளர்ந்து விட்டிருப்பதைக் காண முடிகிறது.

---

## விசேஷ நாட்கள்

### 11—2—71 முதல் 12—3—71 முடிய

| | |
|---|---|
| 21—2—71 | காரிநாயனார் திருநக்ஷத்திரம் |
| 22—2—71 | ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் கனகாபிஷேகம் கொண்டருளிய திருநக்ஷத்திரம் |
| 23—2—71 | பிரதோஷம் ; மகாசிவராத்திரி |
| 25—2—71 | கோச்செங்கட்சோழ நாயனார் திருநக்ஷத்திரம் |
| 3—3—71 | வேளூர்க் கிருத்திகை |
| 9—3—71 | பிரதோஷம். |

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்துக்குச் சொந்தமான

திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானம்

# மகாகும்பாபிஷேகம்

31—3—1971

" ஐயாறர் ஐயாறர் என்பார்க் கன்றே
அவனியெலாம் ஒருகுடைக்கீழ் ஆளலாமே "

—திருவையாற்றுப் புராணம்.

**இன்பம் பெருகும் :**

'எல்லா நலங்களும் பெறவேண்டும்; இன்பம் வேண்டும்; அந்த இன்பமும் எப்போதும் வேண்டும்; எதிலும் வேண்டும்' என்றுதான் மனிதன் விரும்புகின்ருன். அவனுடைய முயற்சி எல்லாம் இப்படித்தான் அரும்புகின்றன; மலர்கின்றன. ஆனல் அந்த முயற்சியில் அவன் வெற்றிபெறுகின்ருனு? அது அவன் கைகளில் இல்லே. அவன் செய்த நல்வினே தீவினேகளுக்கேற்பத் திருவருளாலேயே அவனது முயற்சியின் வெற்றியும் தோல்வியும் அமைகின்றன. எல்லாம்வல்ல திருவருளே நம்பி-சரணுகதி அடைந்து செயற்பட்டால் நன்மை விளேகின்றது; இன்பம் பெருகுகின்றது; அமைதி தழைக்கின்றது.

**தருமையாதீனக் கோயில் :**

தருமத்தின் வடிவமான திருநந்திதேவர் திருமணம் கொண்ட பெருமையும், சிவபெருமான் தன்னேத்தான் பூசித்த மாண்பும் உடையது திருவையாறு. தருமையாதீனத்தின் இருபத்தேழு தேவஸ்தான விண்மீன்களில் இதுவும் ஒன்று.

**இறைவனும் இறைவியும் :**

ஐயாறப்பர் சுயம்பு வடிவம்; செம்பொற்சோதியார். அறம் வளர்த்த நாயகி; திரிபுரசுந்தரியாய் - தருமாம்பிகையாய் - அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லியாய் அழகுக் காட்சியும்

அருள்மழையும் வழங்கி நிற்கின்ருள். இத்தலத்தில், சப்த ஸ்தானம் எனப்படும் ஏழூர்த்திருவிழாவில் இறைவனும் இறைவியும் திருவார் சிவிகையில் ஏறி அருள்வழங்குவர். இது கண்கொள்ளாக்காட்சி.

### தீர்த்த மாண்பு :

சூரியபுட்கரிணியும், காவிரியும் இங்குப் பெருந்தீர்த்தத் துறைகள். ஐப்பசிமாதம் முழுவதும் மற்ற இடங்களில் மூழ்கிய பலனையெல்லாம் இங்கு வந்து காவிரியில் ஒருநாள் மூழ்கினுல் தருவதற்கு இறைவன் காத்திருக்கின்ருன். எல்லாப்பிணிகளையும் தொலைக்க வல்ல வில்வமே இங்குத் தல விருட்சமாக நின்று துன்பம் போக்கும் துணையாக உள்ளது.

### தென்கயிலைக் காட்சி :

தென்கயிலாயமாகிய இங்கே திருநாவுக்கரசர் திருக் கயிலைக் காட்சிகண்டார்; 'கண்டறியாதன கண்டேன்; கண்டறியாதன கண்டேன்' என்று ஆடிப்பாடி அனைத்தும் சிவசக்தி மயமாகக் கண்டு தெய்வத் தமிழ்க் கவிதாஞ்சலி செய்த சிறப்பை இத்தலம் பெற்றுள்ளது. நால்வர் நற்ற மிழும் பெற்ற நற்றலம் இது.

### ஆட்கொண்டார் :

இறைவனுடைய ஏவலாலே துவாரபாலகர்களில் ஆட் கொண்டார் இயமனை - காலக்கடவுளைக் காலின்கீழ் வதைக்கும் திருக்கோலத்தில் தென் வாயிலில் காட்சி தருகின்ருர். குங்குலியமிட்டு அன்பர்கள் இந்தச் சந்நிதியில் வழிபாடு செய்வர். 'புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐம்மேல் உந்தி அலமந்தபோது அஞ் சேல் என்று அருள் செய்வான் அமரும் கோயில்' என்பது ஆளுடையபிள்ளையார் அருள்வாக்கு.

### தென்முகக் கடவுள் திருக்கோலம் :

தட்சிணுமூர்த்தி ஸ்ரீ ஹரி குரு சிவயோக தட்சிணுமூர்த்தி யாய் அருள் வழங்குகின்ருர். அருள்வழியும் திருமுகம், 18

பேதங்களில் சிறப்புள்ள ஒன்று. வலது மேற்கரத்தில் பிரம கபாலம். இடது கரத்தில் சூலம்; கீழ் வலக்கரம் சின்முத் திரை; இடதுகரத்தில் சிவஞானபோதம் திருவடிக்கீழ் கூர்மம். தியானிப்போர்க்கு அரும்பலன்களை அருளும் ஞான மூர்த்தம். அவர் சந்நிதியிலே ஐப்பேச மண்டபம், முத்தி மண்டபங்களுள் ஒன்று.

### வில்லேந்திய வேலன்:

தனுசு சுப்பிரமணியர் இங்கே வில்லேந்திய வீரக்கோலத் துடன் நிற்கின்றார். இருபுறமும் தேவியர் திருக்காட்சி. மயிலேறும் மாமுருகன் அன்பர்கள் வினைத் துன்பங்களைப் போக்க வில்லேந்தி நிற்கின்றான்.

### மகாகும்பாபிஷேகத் திருப்பணி:

தருமையாதீனம் 25 ஆவது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் இவ்வருந் திருக்கோயிலைத் திருப்பணி கள் புரித்து வருவதுடன், இவ்வாண்டு பங்குனித்திங்கள் 17உ (31—3—1971) மகாகும்பாபிஷேகம் நிகழ்த்தத் திருவருள் துணையால் திருவுள்ளம் கொண்டு உள்ளார்கள். அதற் கேற்ற நிலையில் சுவாமி கோயில், கோபுரம், விமானங்கள், அம்பாள் கோயில், கோபுரம் விமானங்கள், தென்கயிலாயம், வடகயிலாயம், பிராகாரம் தளவரிசை, ஐதீக சுதைகள், திருவோலக்க மண்டபம், பழனி ஆண்டவர் மண்டபம், புஷ் கரிணி தீர்த்தத்துறை முதலிய பல திருப்பணிகள் செய்யத் திட்டமிடப்பட்டிருக்கிறது. திருப்பணிகள் தொடங்கி நடை பெறுகின்றன.

செய்தார் சிறக்கச் சிவபுரத்தைச் சிற்ப வுரையில்
திகழ்விதியா(ல்)
எய்தார் பிறப்பிற் சிவலோகம் எய்திப் போக
மினிதருந்தி
வெய்தாம் வினையும் ஆணவமும் வீயா மாயை
யொடும்விடவே
மெய்யாம் பரம வித்தையுற விமலன் கமலம்
விரவுவரே.

—சிவதருமோத்தரம்.

என்று திருப்பணி செய்பவர்கள் அடையும் பேறுகள் கூறப்படு கின்றன. அன்பர்கள் பலரும் இத்திருப்பணியில் அவரவர்

இயன்ற அளவில் ஈடுபட்டு இந்த நல்ல திருவருட் கைங்கரியத்தில் பங்குபெற்று நல்லருள்பெற ஐயாறப்பர் திருவடி வாழ்த்துதல் வேண்டும்.

**திருப்பணிக்கு உதவவாரீர்!**

அன்பர்கள் செய்ய விரும்பும் உதவிகள் பணமாகவும் அமையலாம்; பண்டங்களாகவும் அமையலாம்; எந்த நிலையிலும் அன்புகனிந்து வழங்கப்படும் உதவிகளைத் தேவஸ்தானம் ஏற்கும். செலுத்துவதற்கு தேவஸ்தானத்தில் உரிய பற்றுச்சீட்டுக்களும் பெற்றுக்கொள்ளலாம். நல்லது செய்யத் துடிக்கின்ற - காத்துநிற்கின்ற அன்பர் திருக்கூட்டத்திற்கு இது நல்ல சந்தர்ப்பம் அல்லவா?

“ அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்றெம்
பெருமானை அந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால்
ஈசனடி ஏத்துவார்கள்
தன்னிசையோ டமருலகில் தவநெறிசென்று
எய்துவார் தாழாதன்றே ”

---



# செய்திகள்



கடல்கடந்த நாடுகளில்

## திருவாசகமணி அவர்களின் சமயத்தொண்டு

திருவாசகமணி அவர்கள் சிறந்த சமயப்பணியாளர். சமய உண்மைகளைத் தெளிவாக எடுத்துரைக்கும் திறன் பெற்றவர். திருமுறைகள் சித்தாந்த சாத்திரங்களில் அழுந்தியபற்றும் புலமையும் உடையவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் அழகாகப் பேசும் வன்மையுடையவர். பலமுறை இலங்கை, மலேசியா முதலிய கடல்கடந்தநாடுகளுக்குச்சென்று சமயப்பிரசாரம்செய்து சமய உண்மைகளை உணர்த்தி வந்தவர். அன்பர்கள் பலரது வேண்டுகோட்கிணங்கி 1970ஆம் ஆண்டு நவம்பர் மாதம் திருவாசகமணி அவர்கள் இந்தோனேசியா சென்று பலநாட்கள் அந்நாட்டில் தங்கித் தொண்டாற்றிவிட்டு டிசம்பர்த்திங்களிறுதி யில் மீண்டும் மலேசியா சென்றுள்ளார். அங்கிருந்து சிங்கப்பூர் முதலிய பிறநாட்டுச்சுற்றுப்பயணத்தைமேற்கொள்ள இருக்கிறார்.

வட சுமத்ராவின் தலைநகரான மேடானில் நாற்பத்து ஐந்து நாட்கள் தங்கி ஸ்ரீ மகாமாரியம்மன் கோயிலில் இருபது சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். பத்தாயிரத்துக்கு மேற்பட்ட இந்து சமய மக்கள் நாடோறும் கேட்டு மகிழ்ந்தனர். மாரி யம்மைமீது தாம் பாடிய திருப்பதிக நூலை அரங்கேற்றினார். மேடானில் சிறந்த சமய விழிப்புணர்ச்சியை இவர் பேச்சு உரு வாக்கியுள்ளது.

மேடான் இந்து வாலிபர் சங்கத்தினர் திருவாசகமணி அவர்களை அழைத்து சொற்பொழிவாற்றச்செய்து கௌரவித் துள்ளனர். மேடானில் திருவாசகமணி அவர்கள் இந்தியக் கான்சல்ஜெனரல் ஸ்ரீசேத்தி தலைமையில் சொற்பொழிவாற்றினார். புறச்சமயக் கருத்துக்களையும் நம் சமயக் கருத்துக்களையும் கேட்போர் வியக்குமாறு ஒப்பிட்டுப் பேசி சமய உண்மை களைப் பற்றிச் சொற்பொழிவாற்றியுள்ளார். மேடான் நகர் மக்கள் அன்போடு சொற்பொழிவுகளைக் கேட்டுக்களித்தனர். திருவாசகமணி அவர்கட்குப் பாராட்டுக்கள் வழங்கியும் பரிசுகள் அளித்தும் பொன்னாடைகள் போர்த்தியும் சிறப்பித்தனர். 'சமரசச் சைவமணி' என்ற பட்டத்தையும் அவருக்கு வழங்கிக் கௌரவித்தனர்.

இந்தோனேசியாவின் தலைநகரான ஜகர்த்தாவில் பத்து நாட்கள் தங்கி சமய விரிவுரைகள் ஆற்றி இந்தியநாட்டின் ஆன்மீகச் சிறப்பை அந்நாட்டு மக்கள் அறியும்படிச் செய்துள்ளார். அந்நாட்டின் ஜனாதிபதி ஜெனரல் சுகர்த்தோவைச் சந்தித்து தமது திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலை அவருக்குவழங்கி மகிழ்ந்தார். ஜகர்த்தாவிலுள்ள பத்திரிகைகள் அவருடைய செய்திகளை வெளியிட்டு ஆதரித்தன. வானொலி அவருடைய பேச்சுக்களை ஒலிபரப்பின. இவ்வாறு கடல் கடந்த நாடுகளில் தங்கிச் சமயவிரிவுரையாற்றித் தொண்டு புரிந்துவரும் திருவாசகமணி அவர்கட்குத் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாசி அனுப்பியருளியுள்ளார்கள்.

## மௌனகுரு தாயுமானவர் குருபூஜை விழா

தருமை ஆதீனத்தைச் சேர்ந்த திருச்சி மலைக்கோட்டை மௌனமடத்தின் முதல்வர் ஸ்ரீமௌனகுருவிற்கும் அவர்சீடரான ஸ்ரீ தாயுமானவருக்கும் 21—1—71ல் திருச்சி மௌனமடத்தில் குருபூஜைவிழா சிறப்பாக நடைபெற்றது. காலையில் ஸ்ரீமாணிக்க விநாயகர், ஸ்ரீ உச்சிப்பிள்ளையார், ஸ்ரீ மட்டுவார் குழலம்மை உடனுறை தாயுமான ஈசர், மௌனகுரு ஸ்ரீ தாயுமானவர் ஆகிய மூர்த்திகட்கு விசேட அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. மதியம் அடியார்கட்கு மாகேஸ்வர பூஜை நிகழ்த்தப்பெற்றது. மௌனமடம் கட்டளை விசாரணை தவத்திரு. மௌன சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் சிறப்பாக நடத்திவைத்தார்கள். மௌனகுரு வழிபாட்டுக் கழகத்தினரும் அபிஷேக ஆராதனைகளில் பங்குகொண்டு பணியாற்றியது குறிப்பிடத்தக்கது.

மாலை 7 மணிக்கு நூற்றுக்கால் மண்டபத்தில் தாயுமான அடிகள் பாடல்களின் உரையரங்கம் திருச்சி மாவட்டத் துணை நீதிபதி திரு.எம். ஏ. முருகேசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருக்குறள்வேள் திரு. ஜி. வரதராசபிள்ளை உரையரங்கத்தைத் தொடங்கிவைத்தார்கள். வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர், திரு, இரா. செல்வக்கணபதி, திரு, ஆதி. முருகவேள், திரு, அ. வ. இராஜகோபாலன், திரு. பட்டுசாமி ஓதுவார் ஆகியோர் "அவனன்றி ஓரணுவும் அசையாது" "கல்லாத பேர்களே நல்லவர்கள்" "காரிட்ட ஆணவக்

( தொடர்ச்சி 176 ஆம் பக்கம் பார்க்க )

## மதிப்புரை:

'குமாரசுவாமிப் புலவர்' என்னும் உரைநடை நூல் வரப்பெற்றோம். ஆக்கியோர், திரு. கு. முத்துக்குமாரசுவாமிப் பிள்ளை அவர்கள், பி.ஏ., (முன்னாள் சென்னை லயோலாக்கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் – இலங்கை அராலி இந்துக் கல்லூரி அதிபர்.)

யாழ்ப்பாணம், தமிழுக்கும், சைவத்திற்கும் என்றும் உறு துணையாய் விளங்குவது. அங்கு நல்லாசிரியரிடம் முறையாகப் பயின்று வடமொழி தென்மொழிகளில் உயர் புலமை பெற்ற பேரறிஞர் பலர் தமது சொல்லாலும் எழுத்தாலும் தமிழ் மொழிக்கும், சைவ சமயத்திற்கும் செய்துள்ள தொண்டுகள் பல. இவர்களில், காலம் சென்ற 'குமாரசுவாமிப் புலவர்' என்பவர் குறிப்பிடத்தக்க ஒரு பெருமகனார். அவர், சிற்றதிகாரங்களாய் இக்காலத்தில் பெரும்பாலும பயிற்சியில் உள்ள இலக்கண நூல்கட்கு எழுதிய புத்துரைகளும், தொகுத்து வெளியிட்ட இலக்கியச் சொல்லகராதியும் தமிழுலகில் அவருக்குப் பெரும் புகழைத் தந்துள்ளன. செய்யுள் நடையிலும், உரைநடையிலும் அவர் ஆக்கியுள்ள நூல்கள் பல. உரிச்சொல் நிகண்டு முதலிய பல நல்ல நூல்களை நன்முறையில் பதிப்பித்து வெளியிட்டார். சிறந்த வடமொழி தென்மொழிப் புலமையுடன் சைவக் காவலராய் விளங்கிய ஆறுமுக நாவலரவர்களால் பாராட்டப் பெற்றவர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய பெரும்புலவரது வரலாறு பிற்காலத்தார்க்குப் பெரும்பயன் தருவதாகும். அது கருதி இந்நூலாசிரியர் பெரு முயற்சி எடுத்து, இவரது முன்னோர் முதலாக, உறவினர் நண்பர் ஆதரித்தோர் வரை உள்ள பலரது பெயர்கள், இவர் இயற்றிய நூல்கள், உரைகள், மதிப்புரைகள், பத்திரிகைக் கட்டுரைகள் முதலிய பல குறிப்புக்கள் எல்லாவற்றையும் தேடிச் சேர்த்துப் பல நலங்களும் பொதுள, 'முற்காலம், இடைக் காலம், பிற்காலம்' என்ற கால வரையறைகளில், எடுத்துக் கொண்ட புலவரது வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலவற்றையும் முறையாகத் தந்து நல்லதொரு வாழ்க்கை வரலாற்று நூலைத் தமிழுலகிற்கு அளித்துள்ளார். குமாரசுவாமிப் புலவர் தமது வாழ்க்கையில் மூன்று முறை இந்திய நாட்டு யாத்திரை செய்ததாக இந்நூலால் அறிகின்றோம். அவற்றில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் நம்மனோர்க்குப் பெரிதும் பயன்படும். இத்தகைய புலவர் வாழ்க்கை வரலாற்று நூல் பலரும் படித்துணரத்தக்கது. விலை ரூபா. 6—50. புத்தகம் வேண்டுவோர், 'புலவரகம், மயிலணி, சுன்னாகம், இலங்கை' என்ற முகவரியில் நூலாசிரியருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

— சி. அ.



# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம்

## திரு. K. முத்துஜோதிடர்

(சாதாரணஞு மாசிமீ 1வ முதல் 30வ முடிய)

( 13—2—71 முதல் 14—3—71 முடிய )

சாதாரண வருஷம் மாசிமாதம் முதல்தேதிமுதல் 30ந்தேதி முடிய (13—2—71 முதல் 14—3—71 முடிய) ஷ மாசிமாதம் கும்பராசிக்கு ஸ்ரீ லோகரக்ஷகரான சூரியபகவான் தை மாதம் 30 ந் தேதி வெள்ளிக்கிழமை உதயாதி நாழிகை 44-4 விஞடிக்கு துலாலக்னத்தின் அந்திய நவாம்சையில் லக்ன ஸந்தியில் கும்பராசி பிரவேசம் செய்கிருர். உத்திரநக்ஷத்திரம் முதல்பாதத்தில் கும்பஸங்கிரமணம். சுபம். ராத்திரியில், மாச பிரவேசம் சுபமாதலால் சிற்சில சுபங்களே உலகத்துக்குத்தரும் சிலர் சந்தோஷ மடைவார்கள்.

### 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனேத் தரும். அநேகமான ஈதிபாதைகளாலும் குடும்பத்தில் பலவிதமான மாறுதல்களாலும் கவலேயை உண்டுபண்ணும். வரவு செலவு சமமாக இருக்கும். ஆரோக்கியம் குறைந்துகாட்டும்' வெள்ளி சனி சுபமாகும்.

### 2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபபலனேத்தரும். இடம் மாறுதல் ஏற்படும். ஜீவனம் விருத்தியாகும். இல்லற சுகம் அதிகமாகும், உறவினர்களுடைய சேர்க்கையும், சிநேகிதர்களுடைய வரவும் ஏற்படும், எல்லாம் நன்மையாகவே நடக்கும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

3. மிதுனம் – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ – திருவாதிரை–புனர்பூசம் $\frac{3}{4}$

மிதுனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபமான பலனைத் தரும். வெகுகாலமாக எதிர்பார்த்து நடைபெறாத காரியங்கள் எல்லாம் சுலபமாய் நடக்கும். தெய்வபலம் முன்னின்று காக்கும். உலகப்பிரசித்தியும், தொழில் விருத்தியும் உண்டாகும். சத்ருக்கள் சமாதானமுறையில் இருந்துகொண்டு இருப்பார்கள். எங்கும் கீர்த்தியும் ஜெயமும் உண்டாகும் செவ்வாய் புதன் சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் பூராவாக சுபபலனைத் தரும். குடும்பத்தில் விவாகம் முதலிய சுபமான காரியங்கள் ஏற்படும். தன தான்ய விருத்தி ஏற்படும், நஷ்டமான பொருள் தானாக வந்துசேரும், ஜீவனம் விருத்தியாகும், இல்லறசுகம் ஓங்கும். வியாழன் வெள்ளி சுபமாகும்,

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் $\frac{1}{4}$.

சிம்மராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அதிகமான உழைப்பும், மேலோர் பெரியோர்களின் அன்பும் தொழில் விருத்தியும் ஏற்படும், ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் எதிர்பாராமல் கிடைக்கும் இல்லறம் ஓங்கும் வரவு செலவு சமமாகும். சனி ஞாயிறு சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் $\frac{3}{4}$ – ஹஸ்தம் – சித்திரை $\frac{1}{2}$.

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும், கொஞ்சம் ஆரோக்யக் குறைவும் அதிகமான நஷ்டங்களும், முயற்சி செய்கிற காரியங்களில் கொஞ்சம் தாமதமும் கொஞ்சம் ஈதிபாதைகளையும் கொடுக்கும், தெய்வபலம் முன்னின்று எல்லாவற்றையும் ஜெயிக்கும், மனம் சாந்தியடையும், திங்கள் செவ்வாய் சுபமாகும்

7, துலாம் – சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$

துலாராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும், யக்ஞயாகாதி பிரதிஷ்டா பலன்களையும் உலக பிரசித்தியையும்

தரும். தூரதேசத்திலிருந்து அடிக்கடி அழைப்புப் பத்திரங்கள் வந்துகொண்டு இருக்கும். ஆரோக்யம் உண்டுபண்ணும், தன தான்ய சமிருத்தி ஏற்படும், ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் சேரும். புதன் வியாழன் சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் $\frac{1}{4}$ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். தொழில் ஓங்கும், பலவிதமான தொழில்கள் உண்டுபண்ணி லாபத்தைத் தரும், வரவு செலவு சமமாக இருக்கும், புதிதாக வஸ்திராபரண சேர்க்கைகளும் ஏற்படும், உறவினர்கள் சிநேகிதர்கள் வரவு ஏற்படும். வெள்ளி சனி சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$.

தனுர் ராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும், இடம் மாறுதலும் சுகமான வாழ்க்கையும் ஏற்படும், ஸ்தாவர ஜங்கமங்களில் கிரய விக்ரயங்கள் ஏற்படும், வாழ்க்கையில் பலவிதமான மாறுதல்களை உண்டுபண்ணும், வரவு செலவு சமமாக இருக்கும், தெய்வ பலம் முன்னின்று காக்கும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபமான பலனைத்தரும். உத்தியோகத்தில் மேல்பதவிகளும், தனதான்ய சமிருத்தியும், கிரக லாபமும், புதிதாக வஸ்திராபரணச்சேர்க்கையும்ஏற்படும். ஆரோக்யம் தரும். செவ்வாய், புதன் சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$,

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி மருந்துகள் சாப்பிடும்படி நேரிடும். அதிகமான செலவுகள் ஏற்படும். அடிக்கடி சஞ்சாரமும் ஏற்படும். விரத உபவாச நியமங்களால் தெய்வபலம் முன்னின்று காக்கும். புதிதாக தொழில் உண்டாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

## 12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

மினராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபபலனைத் தரும். உத்தியோகத்தில் மேல்பதவி ஏற்படும். நஷ்டமான பொருள்கள் தானாகவந்துசேரும். களத்திர புத்திராதிகளால் இல்லறம் ஓங்கும். உழைப்பும் அதிகமாகும். தெய்வபலம் முன்னின்று காக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

குறிப்பு :- சாதாரண வருஷத்திய ராஜமந்திரிகளுக்கு ஷஷ்டாதிபதி சம்பந்தமும், சந்திரனுக்கு 6-12ல் ராகுகேதுக்களும் அமைந்தபடியால் அ, க, ச, ட, த, ப என்னும் அக்ஷரங்களை முதல் எழுத்தாக அமைந்த தேசம், நகரம், மனுஷ்யாள் முதலானவர்களுக்குப் பல சிரமங்களையும், ஈதிபாதைகளையும், உத்பாதங்களையும், பயத்தையும் காட்டி தர்ம பூமிகளில் தெய்வ பலம் பிரதானமாக உடைய தேசம், கிராமம், மனுஷ்யாள் முதலியவர்களைக் காப்பாற்றும். தெய்வ பலம் முன்நின்று காக்கும். சகல பிரஜைகளும் நாஸ்தீகமில்லாமல் சதா தெய்வ சிந்தனையாகவே. தனது கடமைகளை நமக்குமேல் கடவுள் ஒருவர் இருக்கின்றார் என்னும் பயத்தோடு சகல பாரத்தையும் சர்வேசுவரனிடம் ஒப்படைத்து விட்டு சந்தோஷமாக இருக்க சமஸ்தமங்களமும் ஏற்படும். சுபமாகும்.



---

( 171 ஆம் பக்கத் தொடர்ச்சி )

கருவறையில் " "பண்ணேன் உனக்கான பூசை" "எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவி" என்ற தாயுமானவர் பாடல்களுக்கு விரிவுரையாற்றினார்கள்.

வரவேற்புரையும் நன்றிகூயுரையும்றிய ஸ்ரீமத் மௌன.சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் மௌனகுருவின் பெருமையையும் தாயுமானவர் சிறப்பையும் இணைத்துப் பேசினார்கள். திரு முத்து கந்தசாமி தேசிகர் கடவுள் வணக்கமும் வாழ்த்தும் பாடினார். ஏராளமான பக்தர்கள் விழாவில் பங்குகொண்டு சிறப்பித்துப் பயனுற்றனர்.

# STUDIES IN SAIVA SIDDHANTA

[ Part II ]

By Thiru J. M. Nallasvami Pillai, B. A., B. L.

( Continued from 10—1—71, Page 8 )

13 and 14. The ear perceives sound through Akas. The body perceives touch through the air. The eye perceives light through fire. The tongue perceives taste through water. And the nose perceives smell through the earth. So the Agamas declare. They who conquer these senses secure the Bliss-ful Beautitude.

15. The Karmendriyas giving rise to speech etc., are mouth, feet, hands, anus and the genital organs.

16. The mouth speaks through the aid of Akas; the feet move through the aid of air; the hands work through the aid of fire; the anus excretes through the aid of water; the genital organs give pleasure through the aid of earth.

17. Hear now the enumeration of the Antah-karanas! They are Manas, Buddhi, Ahankara and Chitta. They respectively conceive, reason, will and reflect.

18. The foregoing 24 tattvas are stated by the ancient Agamas to be the Atma-tattvas. Hear, now the Vidya-tattvas expounded by me.

19. Time, Niyati, Kala, Vidya, Raga, Purusha, Maya, this is their order. Hear now their nature with attention.

20. *Time* measures the past, gives enjoyment in the present, and contains new store for the future. *Niyati*-tattva fixes the order and sequence of Karma. *Kala*-tattva induces action. *Vidya*-tattva induces intelligence. The Purusha-tattva induces perception of the five senses. And Maya induces doubt and ignorance.

21. We have now stated the Vidya-tattvas. Hear now the Suddha-tattvas! They are Suddha-Vidya, Isvara, Sadasiva, Sakti and Siva tatvas.

22. * Suddha-Vidya induces more intelligence than action. Isvara-tattva induces more action than intelligence. Sadasiva-tattva induces them both in equal proportion. Sakti-tattva induces action, and Siva-tattva induces Jnana alone.

23. † We have now fully stated the 36 Tattvas. Hear now about the two kinds of Mala, Anava and Karma. Stated, Anava induces ignorance; Karma Mala induces you to identify yourself thoroughly with the chain of pleasures and pains.

24. O Thou rare Teacher, Thou hast explained to me the nature of the 36 Tatvas, and Anava

---

* All these 36 tattvas are component parts of the universe of matter (Maya), all powerful and all intelligent, in union with which, the soul gets rid of its darkness, and regains its light. This Siva-tattva and Sakti-tattva etc., forming only matter should not be confounded with the Supreme Siva and His Sakti.

† This Karma as defined here is exactly what the Buddhists understand by the Individual Ego, or Individuality which of course subsists from moment to moment and is not anything subsisting permanently.

and Karma. Deign now to show me the nature of myself who seem to differ and not differ from these.

25. Hear well what I state! Achit cannot subsist before Pure Chit. Chit cannot perceive Achit. The Atma (Soul) is what distinguishes and perceives both Chit and Achit. So the Vedas declare without doubt.

26. Hear now how the 36 Tattvas cannot be conscious of themselves. The six kinds of taste cannot perceive themselves. So also the Tattvas do not know themselves

27. As a person has to taste these six kinds of taste and then perceive them, so you are the intelligent person who uniting with these Tattvas perceives each and all of them.

28. "Out of thine undiminished grace, hast thou shown me my nature. Explain to me Thy own Imperishable Form." "As the Sun enables the eye to see, so will we enlighten you and your intelligence."

29. Know more. The senses cannot understand without the soul, and cannot understand the soul. So also do we enlighten you without your being able to perceive *us*.

30. "As the Vowel letter 'A' is to the rest of the letters, so do we stand as the Life of all life. When we are not present in any soul, then will there be no light. So the good Agamas declare."

31. O Meykanda Natha, graciously expound so that I may understand the nature of the Sacred Dance with the sound of the five letters seen by the sages.

32. "O my son, hear; The Supreme Intelligence dances in the soul formed of the letter *ya*, with a Form composed of the five letters *Si*, *va*, *ya*, *na*, *ma*, for the purpose of removing our sins.

33. Hear now how the Dance is performed! In His feet is *na*; in his Navel is *ma*; in His shoulders is *Si*; in his face is *va*; in his Head is *ya*.*

34. ‡The Hand holding out protection is *ya*; the hand holding the fire is *na*; the foot holding down *muyalaka* is *ma*.

35. The arch (திருவாசி over Sri Nataraja is *Omkara*; and the *akshara* which is never separate from the *omkara* is the Filling Splendour. This is the Dance of the Lord of Chitambara. They understand this who have lost their self. (Ahankara). Understanding, they leave their births behind.

36. Creation starts from the Drum. Protection proceeds from the Hand of Hope. The Fire produces Destruction. From the Foot holding down proceeds *Tirobhava*; the Foot held aloft gives mukti.

---

*Note :—These letters have to be contemplated in those parts.

‡Note :—This is another form of contemplating the Panchakshara.

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

# திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானம்

ஜீரணோத்தாரண அஷ்டபந்தன

# மகாகும்பாபிஷேகம்

திருவையாறு ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி சமேத ஸ்ரீ ஐயாறப்பருக்கும் விநாயகர் முதலிய பரிவாரங்கட்கும் சாதாரண ஆண்டு பங்குனித்திங்கள் 17 ஆம் நாள் (31—3—1971) புதன்கிழமை காலை மணி 8-45 க்குமேல் 10-30 க்குள் மகாகும்பாபிஷேகம் செய்துவைக்கத் திருவருளால் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுளம் கொண்டுள்ளார்கள்.

பொருளாதார நிலையை ஈடு செய்வதற்கும், கூட்டத்தைக் கட்டுப்படுத்தி வேதாகமக் கிரியைகள் செம்மையாகச் செய்வதற்கும் எல்லோரையும் இவ் அறப்பணியில் பங்குகொள்ளச் செய்வதற்கும் ஏற்றவகையில் டிக்கட் அமைக்கப்பட்டிருக்கிறது. இத்தொகை திருப்பணிக்கும், மகாகும்பாபிஷேகத்திற்கும் பயன்படுகிறது.

| | | |
|---|---|---|
| சுவாமிகோயில் திருவோலக்க மண்டப மேல்தளம் | ரூ. | 100—00 |
| சுவாமிகோயில் உட்பிராகாரம் மேல்தளம் | ரூ | 50—00 |
| அம்மன்கோயில் மேல்தளம் | ரூ. | 25—00 |
| சுவாமிகோயில் உட்பிராகார மண்டபம் | ரூ. | 10—00 |

ரூ. 100 டிக்கட் வாங்குவோர் குடும்பத்துடன் 5 பேர்களும், ரூ 50 டிக்கட்டுக்கு 3 பேர் விதமும், ரூ 25 க்கு இருவர் விதமும், மற்றவை ஒவ்வொருவர் விதமும் அந்தந்த இடத்திற்கு அனுமதிக்கப்படுவர்.

எல்லோரும் இவ்வருட்பணியில் - அறப்பணியில் உளமுவந்து உதவிசெய்ய வேணுமாய் விரும்புகிறோம். திருப்பணி விரைவில் நிறைவுற்று மகாகும்பாபிஷேகம் இனிது நிறைவேற ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி சமேத ஸ்ரீ ஐயாறப்பரைப் பிரார்த்திக்கிறோம்.

---

தொகையை அனுப்பி டிக்கெட் பெற்றுக்கொள்ள வேண்டிய முகவரி :-

காஷியர்,

ஸ்ரீ பஞ்சநதீஸ்வரசுவாமி தேவஸ்தானம்,

திருவையாறு P. O. தஞ்சைமாவட்டம்.

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திலிருந்து வெளிவருவது. சைவ சமயச் சார்பாக எழுதப்பெறும் தெளிவான கட்டுரைகள் அடங்கியது. சமயங்களின் உண்மையை உணர்வதற்குப் பெருந்துணையானது.

புதிய சந்தாதாரர்களாகச் சேர்பவர்கள் புதிய சந்தா என்பதோடு தங்கள் முகவரியையும் தெளிவாக மணியார்டர் கூப்பனில் எழுதுதல் வேண்டும். பழைய சந்தாதாரர்கள் புதிய ஆண்டுக்குப் பணம் அனுப்பும்போது பழைய சந்தா எண்ணைக் குறித்தல்வேண்டும். எவையேனும் விபரம் தெரிந்துகொள்ள விரும்புவோர் பதில் எழுதுவதற்குப் போதுமானதபால் தலைகள் அனுப்புதல் வேண்டும்.

ஆண்டுக் கையொப்பம்

உள்நாடு ரூ. 3—00 ] [ வெளிநாடு ரூ. 4—00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:—

செயலாளர்,
ஞானசம்பந்தம் காரியாலயம்,
தருமையாதீனம்,
தருமபுரம், மாயூரம் P. O.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—2—71.